KALKI 8.12.96 ரூ. 3.00

# கல்கி



"அனந்தன் பற்றி அப்போதே சொன்னேன்!"

- வாழப்பாடி பேட்டி!

# ஓயாமல் சிரிக்கும் டெலிபோன் மணி!

பெண் அழகே!
உன் அழகு பேரழகு ஆனதென்ன?!
விலையிலும் மலிந்து மனதிலும் நிறைந்து
யோகமுள்ள சாரதா'ஸ் புடவை
உடுத்தி வந்ததாலோ!!

வனதேவதை

சாரதா'ஸின்
இவ்வருடத்திய புதிய டிசைன்கள்...

தங்கத்தாரகை



# சாரதாஸ்

(முகூர்த்த பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)

827, அண்ணா சாலை,
தன்பில்டிங், சென்னை - 2
போன் : 852 11 77

32, என்.எஸ்.பி.ரோடு,
திருச்சி - 2
போன் : 27077

சாரதாஸ் திருச்சி - 2, சென்னை - 2
தவிர வேறு எங்கும் கிளைகள் கிடையாது.

# ஊழல் விசாரணைகள் எப்படி நடக்கின்றன?

கடந்த 6.10.96 கல்கி இதழில் "இது நம்ம ஆட்சியிலா நடந்தது?" என்ற தலைப்பில் அம்பத்தூர் வட்டாரப் பிரச்னைகளைப் பற்றிய கட்டுரை ஒன்று வெளி வந்தது. "அம்பத்தூர் நகராட்சியில் விதிகளை மீறி சாலைகள் போட டெண்டர் விடப்பட்டது குறித்தும், மறு எஸ்டிமேட் என்ற பெயரில் ஒப்பந்தத் தொகைகள் அதிகரிக்கப்பட்டு லட்சக்கணக்கான ரூபாய், அதிகாரிகளாலும், அரசியல்வாதிகளாலும் கொள்ளையடிக்கப்பட்டது பற்றியும் கொரட்டூர் வீட்டு வசதி வாரிய மகளிர் சமூக நல சேவா சங்கத் தலைவி திருமதி விஜயா, அந்தக் கட்டுரையில் குறிப்பிட்டிருந்தார். இதில் ஹைலைட்டான விஷயம் என்னவென்றால், வில்லங்கமான இந்த விவகாரத்தில் ஜெ. அரசு நிறுத்தி வைத்திருந்த பேமெண்டுகளை, தி.மு.க. ஆட்சிக் காலத்தில் பட்டுவாடா செய்யப்பட்டதுதான். அதுபற்றி கலைஞரிடம் புகார் மனு கொடுக்கப்பட்டு, விஜிலன்ஸ் இணைக் கமிஷனர் உமாசங்கர் விசாரிக்கத் துவங்கினார்.

அந்த விசாரணை இப்போது எந்த அளவில் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வதற்காக அம்பத்தூர் நகராட்சி, நகராட்சி இயக்குனர் அலுவலகம், கோட்டை ஆகிய இடங்களைச் சுற்றினோம்.

"ஊழல் எப்படி நடந்திருக்கிறது; அதற்குப் பொறுப்பான அதிகாரிகள் யார், கொள்ளையடிக்கப்பட்ட பணம் எவ்வளவு என்பது பற்றிய மிக விரிவான அறிக்கை ஒன்று உமாசங்கரால் தயாரிக்கப்பட்டு, மேல் நடவடிக்கைக்காக விஜிலன்ஸ் கமிஷனருக்கு அனுப்பப்பட்டது. இது பற்றி மேலும் விசாரித்து, பின்னர் லஞ்ச ஒழிப்புப் போலீஸ் மூலம் கோர்ட்டில் வழக்குப் பதிவு செய்யலாம் என்றும் அதில் குறிப்பிட்டிருந்தது.

ஆனால் கோட்டையில் உள்ள சில மூத்த ஐ.ஏ.எஸ் அதிகாரிகள், பிடிக்க வேண்டியவர்களைப் பிடித்து, லஞ்ச ஒழிப்பு போலீஸ் மூலமாக வழக்கு நடக்கவிடாமல் தடுத்து.



''ஆனாலும் அந்த பத்திரிகை, வாசகர்களை ரொம்பக் கேவலமா மதிக்குது.''

''எப்படி?''

''வாரத்துக்கு எத்தனை நாட்கள்னு கேள்வி கேட்டு குலுக்கல் முறையில ஒரு வாசகருக்கு பரிசு கொடுத்திருக்காங்களே!''

– சீர்காழி வி. ரேவதி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

இலாக்கா பூர்வமான விசாரணை என்று முடிவெடுக்க வைத்து விட்டார்கள்! "இதனால் என்ன ஆகும் என்றால், அதிகாரிகளே, கண் துடைப்பு விசாரணை நடத்தி சக அதிகாரிகளைக் காப்பாற்றிவிட வாய்ப்பளித்ததாகும், அவ்வளவுதான்!" என்று வயிறெரிந்து சொன்னார், நகராட்சி நிர்வாகத் துறையைச் சேர்ந்த சீனியர் அதிகாரி ஒருவர்.

ஆனாலும் ஓர் ஆறுதல் என்னவென்றால், இப்போது நகராட்சி இயக்குனராக இருக்கும் அசோக் வரதன் ஷெட்டி என்பவர், மிகவும் நேர்மையான அதிகாரி. இவர் காலத்தில் இந்த இலாக்கா விசாரணை நடந்து முடியுமானால், குற்றம் செய்தவர்கள் தப்பிக்கவே முடியாது என்றும் சொல்லப்படுகிறது.

இந்த விஷயம் இப்படி இருக்க, அ.தி.மு.க. ஆட்சியின் ஐந்தாண்டு காலத்தில் நேர்ந்த முறைகேடுகளுக்கு ஒத்துழைத்து, கூட்டுக் கொள்ளையடித்த சில அதிகாரிகள் கழுவுகிற மீனில் நழுவுகிற மீனாக வழுக்கி விடுகிறார்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

''உலகம் அநியாயத்துக்கு தலைகீழா மாறிட்டுதுன்னு எப்படிச் சொல்றே?''

''தீபாவளிக்கு வந்த என் மாமனாரும் மாமியாரும் லேசில் ஊருக்குக் கிளம்ப மாட்டேங்கிறாங்களேடா!''

– ஆலத்தம்பாடி ராஜகோபால்



களாம். உதாரணமாக கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு 45,000 கலர் தொலைக்காட்சிப் பெட்டிகள் வாங்கியதில் அடிக்கப்பட்ட கொள்ளை. இதில் மொத்தமாக பத்துக் கோடி ரூபாய் சுருட்டப்பட்டிருக்கலாம் என்பது குத்து மதிப்பு. ஆனால் இந்த தொலைக்காட்சிப் பெட்டி ஊழல் நடக்க முழுமையாக ஒத்துழைத்தவர்கள் கிராமப்புற வளர்ச்சி இலாக்காவைச் சேர்ந்த அதிகாரிகள்தானாம். முறைகேடான விதத்தில் டெண்டரை ஏற்றுக் கொண்டு ஆர்டர் போட்டவர்கள் இவர்கள் தானாம்.

ஆனால் கோர்ட்டில் போடப்பட்ட வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்களின் வரிசையில் இந்த இலாக்காவைச் சேர்ந்த அதிகாரிகள் பெயர் இல்லை. மாறாக இந்த அதிகாரிகளே ஊழல் நடந்திருப்பதாக புகார் செய்து, வழக்குப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது!

"இது எப்படி சார்? கிராமப்புற வளர்ச்சி அதிகாரிகள்தான் முதலில் விசாரிக்கப்பட வேண்டியவர்கள். குற்றவாளிகள் லிஸ்டில் வர வேண்டியவர்கள் எப்படி புகார் கொடுப்பவர்களாக மாறினார்கள்? 'கிராமப்புற வளர்ச்சி அதிகாரிகள்தான் ஊழலுக்குக் காரணம். அவர்களையும் குற்றவாளிகளாக இந்த வழக்கில் சேர்க்க வேண்டும்' என்று நாளைகோர்ட்டில் விவகாரம் வந்தாலும் வரலாம்!" என்றார் கலைஞரின் நல்லாட்சிக்குத் துணையாக நிற்கும் ஓர் அதிகாரி.

இந்த விஷயங்களையெல்லாம் சங்கடத்தோடு காது கொடுத்துக் கேட்டபடி கோட்டை வராந்தாவில் வரும் போது, தொழிற்துறையைச் சேர்ந்த அதிகாரி ஒருவரைச் சந்திக்க நேர்ந்தது.

"ரொம்ப அநியாயம் நடக்குது. ஜெ.ஆட்சியில் 250 கோடி ரூபாய் மதிப்புள்ள தொழிற்சாலையை 50 கோடி ரூபாய்க்குத் தனியாருக்குத் தாரை வார்த்த விவகாரம் கூடிய விரைவில் சந்தி சிரிக்கப் போகிறது. இந்த விஷயத்திலும் மூத்த அதிகாரிகளைத் தப்பிக்க விடும் நோக்கத்தில் 'செக்ஷன் ஆபீசர் குறிப்பு எழுதியதால்தான் இப்படி அடிமாட்டு விலைக்கு தொழிற்சாலையை விற்க நேர்ந்தது' என்று கீழ்நிலை அதிகாரிகளை மாட்டிவிடப் போகிறார்களாம்!'' என்று குமுறிவிட்டுப் போனார் அவர்.

நல்லாட்சி என்பது, ஊழல் நடக்காமல் பார்த்துக் கொள்வது மட்டுமல்ல; ஊழல் செய்த மற்றும் உடந்தையாக இருந்த அதிகாரிகளுக்குத் தண்டனை வாங்கித் தருவதும் தான். ஊழல் அதிகாரிகள் எந்தவிதத் தண்டனையும் பெறாமல் பொறுப்புகளில் நீடித்தால் நல்லாட்சி என்பது கேள்விக் குறியாகிவிடும். இது கலைஞருக்குத் தெரியாததல்ல!

— தில்லப்பா

● நாடாளுமன்ற காங்கிரஸ் உறுப்பினர் அமைப்புத் தேர்தல் அடுத்த மாதம் நடைபெறு மாம். கேசரிக்கு இது துளியும் சம்மதமில்லை. ராவ் ஆதரவாளர்கள் எங்கே முன் னேற்பாடாக எதுவும் செய்து அமைப்பை ஆக்ரமித்து விடுவார்களோ என்ற பயம் இருக் கிறது. பிரியரஞ்சன் தாஸ்முன்ஷி, கேசரியைத் தனியே சந்தித்து, எப்படியாவது நாடாளுமன்ற காங்கிரஸ் தலைவர் பதவியை விட்டு ராவ் விலகுமாறு செய்து விட்டால் போதும். முதல் கட்ட வெற்றி நமக்குத்தான் என்று சொல்லி யிருக்கிறார்.

● ராவ் ஆதரவாளர்களான தேவேந்திர திவி வேதி, ஜனார்த்தன் பூஜாரி, பி.பி. மௌர்யா மூவரையும் கட்சிப் பதவியிலிருந்து விரட்டிய கேசரியிடம், சரத்பவார் 'இது போதாது. இன் னும் ஓர் ஆள் கூட இருக்கிறார். அவரையும் காங்கிரஸ் கட்சி செயலர் பதவியிலிருந்து நீக்கி விடுங்கள்' என்று சொல்லியிருக்கிறார். அவர்: சுதாகர் ராவ் நாயக்!

● தேவே கௌடா, ஹராரே G-15 மாநாட் டுக்குப் போகும் போது, கூடவே தமது உற்றார் உறவினர் பதின்மூன்று பேரையும் அழைத்துச் சென்றது பழைய கதை. அத்தனை பேருக்கும் 'நானே விமான டிக்கெட் பணம் கொடுத்து விட்டேன்' என்று கௌடா சொன்னாலும், எந் தத் தொழிலதிபர் மூலமாகக் கொடுத்திருப்பார் என்று பலத்த கிசுகிசு அடிபடத் தொடங்கிவிட் டது! ஆனால் விஷயம் அதோடு நிற்கவில்லை. தேவேகௌடாவின் தீவிர ஆதரவாளரான ஹர் கிஷன் சிங் சுர்ஜித் அது ஒன்றும் பெரிய விவகாரம் அல்ல என்கிறார்! ஆனால் சுர்ஜித் தின் நண்பர் சீதாராம் யச்சூரி, தேவே கௌடா அப்படித் தம் குடும்ப பரிவாரத்தையே அழைத்துப் போனது ரொம்பவும் கேவலம் என்று அறிக்கை விட்டிருக்கிறார்!

● பஞ்சாப் முதலமைச் சராக ராஜீந்தர் கௌர் பட் டால் என்னும் பெண் மணியை நியமித்ததற்குக்கூட கேசரி – ராவ் நிழல்யுத்தமே காரணமாம். பெரும் பணக் காரரான, ஊழல் எதிலும் சிக்காத, முன்னாள் முதல்வர் ஹர்சந்த்சிங் பிரார், ராவ் ஆதர வாளர் அல்லவா? அதனால் தான் பிரார் தூக்கப்பட்டு, பட்டால் அமர்த்தப்பட்டாராம்!

● ஐக்கிய முன்னணி அமைச்சரவையை ஆதரிப்பதில் காங்கிரஸ் இரண்டு கோஷ்டி களாகப் பிரியும் என்று சொல்லப்படுகிறது. இதில் எந்தக் கோஷ்டி தேவே கௌடாவைத் தொடர்ந்து ஆதரிக்கும் என்பதில் பலத்த சர்ச் சையும் நடக்கிறது. தேவே கௌடாவோ, ராவ் மற்றும் அவரது ஆதரவாளர்களையே ஆழ மாக நம்புகிறாராம். தேவைப்பட்டால் ராவ் ஆதரவாளர்கள் சிலரை அமைச்சரவை யில் சேர்த்துக்கொள்ளும் திட்டமும் இருக்கிறதாம்.

● சுக்ராம் தம் வீட்டிலிருந்த நாலு கோடி ரூபாயும் கட்சிப் பணம்தான் என்று இப்போது சாதிக்கிறார். சீதாராம் கேசரி மீது பழியைப் போட அவர் முயன்றால் தோற்றுத்தான் போவார் என்கிறது டெல்லி வட்டாரம். இரு பது வருடங்களுக்கு மேலாக காங்கிரஸ் கட்சிப் பொருளாளராக இருந்தும் கெட்ட பெயர் சம் பாதித்துக் கொள்ளாத கேசரியிடம், சுக்ராமின் பாச்சா பலிக்காது என்கிறார்கள்.

● வாழப்பாடியாரை விட, குமரியாரே தமிழ்நாட்டு காங்கிரஸ் தலைமைப் பதவியைத் தொடர்நது வகிக்கலாம் என்று மூப்பனார் தில்லியில் தமது முன்னாள் காங்கிரஸ் நண்பர்களிடம் சொல்லியிருப்பதாகவும், ஆனாலும் சமீபத்தில் காங்கிரசில் இணைந்த வாழப்பாடியாருக்குத்தான் மறுபடி பதவி இடைக்கும் என்றும் தெரிகிறது. குமரியாரை விட, வாழப்பாடியாருக்குத்தான் தில்லியில் நண்பர்கள் அதிகமாம்.

— நியூஸ்வாலா

## நானுவுமே நம்புகிறார்

# கௌடா!





**கேள்வி** : சமீபத்தில் ஒரு தனியார் தொலைக்காட்சியில் பேட்டி கொடுக்கும்போது 'பதுங்குவது பாய்வதற்காகத் தான்' என்று சொன்னீர்கள்! எப்போது பாயப் போகிறீர்கள்?

**வாழப்பாடி** : பொதுத் தேர்தலில் தோற்ற நிலையில், காங்கிரசில் மீண்டும் சேர நான் கொடுத்த விண்ணப்பம் நிலுவையிலிருந்த சூழ்நிலையிலும் நான் சில காலம் மௌனமாக இருக்க நேர்ந்தது. அப்போது 'ஏன் மௌனமாக இருக்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். 'பதுங்குவது பாய்வதற்காக' என்று பதில் சொன்னேன். மக்கள் எதிர்ப்பு ஒரு பக்கம் இருக்க, தமிழகத்திலுள்ள பத்திரிகைகளும் கடுமையான அ.தி.மு.க. எதிர்ப்பு நிலையை மேற்கொள்ள, தேர்தலில் அதி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி பலத்த தோல்வி அடைந்தது. அ.தி.மு.க.வுடன் கூட்டணி அமைத்ததால், அந்தக் கட்சிக்கு ஏற்பட்ட அதே நிலை எங்களுக்கும் ஏற்பட்டிருக்



வாழப்பாடி ராமமூர்த்தி காங்கிரஸில் இணைந்ததைத் தொடர்ந்து, தமிழக அரசியலை பரபரப்பு பற்றிக் கொண்டிருக்கிறது. 'குமரிஅனந்தன் நீக்கப்பட வேண்டும்' என்று கருத்துச் சொன்ன வாழப்பாடிக்கு பதிலளிக்கும்விதமாக குமரி பெரிய அறிக்கை விட்டிருக்கிறார். வழக்கமாக வேட்டியை வரிந்து கட்டும் வாழப்பாடி, அனந்தனுக்குப் பதில் சொல்லாமல் கொஞ்சம் அடக்கி வாசிப்பது அவரது நிலைக்கு மாறுபட்டதாக இருக்கிறது. 'அனந்தனின் அறிக்கைக்குப் பத்திரிகைகள் முக்கியத்துவம் கொடுத்த காரணம் எனக்குத் தெரியும்; தக்க சமயத்தில் வெளிப்படுத்துவேன்' என்று நம்மிடம் பேச ஆரம்பித்தார்.

கிறது. இப்போது காலம் மாறிக் கொண்டிருக்கிறது. ஆளும் தி.மு.க.வின் அத்துமீறல்கள், அதிகார துஷ்பிரயோகங்கள், ஊழல்கள், ஆகியவற்றைப் பற்றி பத்திரிகைகள் செய்தி வெளியிடத் துவங்கியிருக்கின்றன. ஆக, இந்த நிலையில் பாய வேண்டிய தருணம் வந்து விட்டது என்பதுதான் என் கருத்து.

கே : குமரிஅனந்தனை எதிர்ப்பவர்கள் தமிழ்நாடு காங்கிரஸ் அலுவலகத்தைப் பூட்டி சாவியை உங்களிடம் கொண்டு வந்து கொடுத்ததற்கு என்ன காரணம்?

வாழப்பாடி : உள்ளாட்சித் தேர்தல்களில் போட்டியிட்ட வேட்பாளர்களுக்கு, தேர்தல் செலவுக்குப் பணமோ, போஸ்டர்களோ கொடுக்காத காரணத்தால் அவர்களுக்கும் தொண்டர்களுக்கும் கடுமையான ஆத்திரம் வந்து விட்டது. அதனால் அவர்கள் அலுவலகத்தை மூடி சாவியை என் வீட்டிற்குக் கொண்டு வந்தனர். அப்போது நான் டெல்லியில் இருந்தேன். விஷயத்தைக் கேள்விப்பட்டவுடன் சாவியை குமரிஅனந்தன் அவர்களிடமே மீண்டும் ஒப்படைக்குமாறு கேட்டுக் கொண்டேன்.

# "அனந்தன் பற்றி அப்போதே சொன்னேன்!"

கே : காங்கிரசில் மீண்டும் இணைந்த அதே வேகத்தில் 'குமரி அனந்தன் நீக்கப்பட வேண்டும்' என்று அறிக்கை விட்டுள்ளீர்களே?

வாழப்பாடி : குமரிஅனந்தன் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து நீக்கப்பட வேண்டும் என்று இப்போது மட்டும் நான் சொல்லவில்லை. காங்கிரஸ் தொண்டர்களின் நம்பிக்கைக்கு உரியவராக அவர் செயல்படவில்லை; தமிழ்நாட்டில் காங்கிரசை, அவர் வழிநடத்திச் செல்லும் முறை ஏமாற்றத்தை அளிக்கிறது என்று தேர்தலுக்கு முன்பிருந்தே சொல்லி வருகிறேன். ஆகவே தொண்டர்களின் கருத்தைத்தான் அப்போதும் சரி, இப்போதும் சரி நான் பிரதிபலிக்கிறேன்.

கே : டெல்லியிலுள்ள கட்சித் தலைமை, உங்களைப் போன்றோரின் எதிர்ப்பைக் கண்டுகொள்ளாமல், இப்போதிருக்கும் தலைவரையே நீடிக்க அனுமதித்தால் உங்கள் நிலை என்ன?

வாழப்பாடி : அகில இந்தியத் தலைமையிடமும் இதுபற்றிப் பேசியிருக்கிறேன். இந்த விஷயத்தில் கூடிய விரைவில் ஒரு முடிவெடுப்பார்கள். இப்போதிருக்கும் தேசியத் தலைமை, எதையும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக் கக்கூடியது அல்ல! என்னை மீண்டும் காங்கிரஸில் சேர்த்துக் கொண்ட வேகத்திலிருந்தே இதை நீங்கள் கணிக்கலாம். ராவ் தான் தேவையில்லாமல் தாமதப்படுத்தினார்.

கே : த.மா.கா. - காங்கிரஸில் இணையும் வாய்ப்பு இருக்கிறதா?

வாழப்பாடி : காங்கிரஸில் இருந்து பல்வேறு காலகட்டத்தில் விலகிச் சென்றவர்கள் திரும்பி வர வேண்டும் என்று அகில இந்தியக் காங்கிரஸின் தீர்மானம் மிகத் தெளிவாகச் சொல்கிறது. அப்படித் திரும்பி வருவதற்கு விருப்பம் தெரிவித்தால் வரவேற்கத் தயார் என்று அந்தத் தீர்மானம் சொல்கிறது. ஆனால், தமிழ் மாநில காங்கிரசின் போக்கு முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது. தமிழ் மாநில காங்கிரஸ், காங்கிரஸோடு இணைவது மக்கள் விருப்பத்திற்கு எதிரானது என்று சில சமயங்களில் சொல்கிறார் மூப்பனார். அவரே மற்றொரு சமயம் பேசும் போது, 'நாங்கள்தான் காங்கிரஸ்' என்றும் பேசுகிறார். என்னைப் பொறுத்தவரையில் தமிழ்நாட்டில் காங்கிரஸைப் பலப்படுத்த அனைவரும் ஒன்றுசேர வேண்டும் என்பதுதான். சோனியா அவர்களைச் சந்தித்த பின்னர் செய்தியாளர்களிடமும் இதைத்தான் நான் சொன்னேன். இதற்காக வராதவர்களை - வர விருப்பம் தெரிவிக்காதவர்களை வெற்றிலைபாக்கு வைத்து அழைக்க முடியாது. என்னால் முடிந்த அளவு ஒற்றுமைக்குப் பாடுபடுவேன்.

கே : நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாலும் பழைய கோஷ்டிப் பூசல்கள் தொடராதிருக்குமா என்ன?



# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை

## அமரர் கல்கி நினைவு நாள்

அமரர் கல்கி நினைவு தினத்தன்று, அவரது எழுத்தையும் பணியையும் நினைவு கூரும் வகையில் சிறப்புக் கூட்டம் நடைபெறவுள்ளது.

*நாள்:* **5.12.96**

*இடம்:* **ஸ்ரீநிவாஸ சாஸ்திரி அரங்கம், லஸ், மயிலாப்பூர், சென்னை -4.**

*நேரம்:* **மாலை ஆறு மணி.**

*தலைமை:* **மாண்புமிகு கல்வியமைச்சர் திரு. க.அன்பழகன்**

*சிறப்புரை:* **திரு. அவ்வை நடராஜன் – அமரர் கல்கியின் நகைச்சுவை; திருமதி சுமதி– அமரர் கல்கியின் பெண் விடுதலை சிந்தனைகள்.**

*வில்லுப்பாட்டு:* **திரு. சுப்பு ஆறுமுகம் குழுவினரின் 'பாரதி வந்தார்!'**

*கல்கி அன்பர்களையும் ரசிகர்களையும் அன்புடன் அழைக்கிறோம்.*

---

**வாழப்பாடி** : தமிழ்நாடு காங்கிரஸில் ஒற்றுமை உண்டாக வேண்டுமென்றால் அதற்கு ஒரே வழி கட்சியின் மேல்மட்டத்திலிருந்து அடிமட்டம் வரை தேர்தல் நடத்துவதுதான்.

**கே** : காங்கிரஸ் – அ.தி.மு.க. மீண்டும் கூட்டணி அமைக்க வாய்ப்பு இருக்கிறதா? ஆளும் கட்சிக்கு எதிரான போராட்டங்களில் அ.தி.மு.க.வுடன் இணைந்து செயல்படுவீர்களா?

**வாழப்பாடி** : தேர்தல் நேரத்தில் கட்சிகள் அணிவகுக்கும் போது, 'இந்தக் கட்சியுடன் கூட்டணிகள் வைத்தால் எத்தனை இடங்கள் கிடைக்கும்' என்பதைக் கணக்குப் போட்டே கூட்டணி அமைகின்றன. மற்ற விஷயங்கள் பின்னுக்குத் தள்ளப்படுகின்றன. ஆகவே தேர்தல் நேரத்தில் அமைக்கப்படும் கூட்டணியைப் பற்றிப் பேசும் சூழ்நிலை இப்போது இல்லை. இப்போதைய ஆளும்கட்சியின் மக்கள் விரோதப் போக்குகளின் காரணமாக எதிர்க்கட்சிகளின் அணி உருவாகலாம்! வருகின்ற தேர்தலில் எப்படிக் கூட்டணி உருவாகும் என்பதை விட வரும் அரசியல் சூழ்நிலை எதிர்க்கட்சிகளை எத்தகைய கட்டாயத்துக்கு உட்படுத்தும் என்பதையும் பார்க்க வேண்டும். சிதம்பரம், மாறன் போன்றவர்கள் கூட, 'எந்தக் கட்சியும் தீண்டத்தகாதது அல்ல' என்று சொல்லியிருக்கிறார்கள். இப்போதிருக்கும் நிலையில் த.மா.கா. முழுமையான எதிர்க்கட்சியாகச் செயல்படவில்லை. இந்த நிலையில் சில பொதுவான விஷயங்களில் ஒன்றுபட்டுப் போராட, – எதிர்க்கட்சிகளின் கூட்டமைப்பை உருவாக்க, கலைஞர் ஆட்சியே வழிவகுக்கும் என்பதுதான் என் கருத்து.

**கே** : சோனியாவை நீங்களும் அரசியலுக்கு வரும்படி அழைக்கிறீர்கள். த.மா.காவினரும் அழைக்கிறார்கள்...

**வாழப்பாடி** : அவர்கள் அழைப்பது போலித்தனமானது. நாங்கள் அழைப்பதுதான் உள்ளப்பூர்வமானது.

**கே** : சோனியா காந்தி யாருக்கும் எந்த விதமான ஆதரவும் கொடுப்பது போல் தெரியவில்லையே!

**வாழப்பாடி** : எங்கள் விஷயத்தில் அப்படிச் சொல்ல முடியாது.

**கே** : டெல்லியில், கட்சியின் மூத்த தலைவர்களிடையே நடக்கும் சண்டைகள் கட்சிக்கு பாதிப்பை உண்டாக்காதா?

**வாழப்பாடி** : ராவ்-கேசரி, கருத்து மாறுபாடுகளால் கட்சிக்கு ஒன்றும் பெரிதாக பாதிப்பு வராது என்பதே என் கருத்து.

சந்திப்பு : **ப்ரியன்**

# TV மர்சனம்

நிலக் கடலை சாகுபடி பற்றிச் சொன்னார்கள். அவர்கள் உபயோகப்படுத்துகிற பட்டம், தாய்மண், உயிர் நீர் போன்ற பல சொற்கள் டைட்டில் பஞ்சத்தில் வாடும் சினிமாக்காரர்களுக்கு மிக உதவிகரமாயிருக்கும் என்பது நம் அபிப்பிராயம். இன்னொரு விஷயம். பேசுபவர்களை இயற்கையான சூழ்நிலையில் பேட்டி காணுவது சரி. ஆனால் ஃபோட்டோ ஸ்டுடியோவில் பாஸ்போர்ட் சைஸுக்கு உட்கார வைக்கிறபடியேவா வைக்க வேண்டும்? வயல் வெளியில் லாங் ஷாட், நடுவில் மிட் ஷாட், எப்போதாவது குளோசப், (இது ரொம்ப முக்கியம்!) ஒரு டிராலி ஷாட் இப்படி மாற்றி மாற்றிச் செய்யலாமே? டீவி என்பது 'கேட்கிற' விஷயமல்ல என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.



●● அவரைக்குப் பூ அழகு; அவருக்கு நானழகு என்று புதிய முகம் பாட்டைக் காட்டினார்கள். சரி, ஏதோ பிடித்த பாடல், கேட்ட பாடல் சமாசாரம் போலிருக்கிறது என்று பார்த்தால் சட்டென்று பாட்டை நிறுத்திவிட்டு, ஒயிலாக ஒரு கார் மீது சாய்ந்தபடி ரேவதி வந்து எயிட்ஸ் விழிப்புணர்வுப் பிரசாரம் செய்தார் பாருங்கள், புல்லரித்து விட்டது. உருக்கமான வரிகளுடன் அவர் விடுத்த வேண்டுகோள் வித்தியாசமான ஒரு விளம்பரப் பாணி.

●● காதல் கோட்டையில் வெள்ளரிக்காய் விற்று, பார்க்காமல் போன சந்திரிகாவை சன் டீவியில் பேட்டி கண்டார் ஷாகுல். "உண்மையைச் சொல்லுங்கள், உங்கள் வயசு என்ன?" என்ற அந்தப் புராதனமான கேள்விக்கு அம்மணியின் பதில் : "எல்லாரும் 17, 16 என்று பொய் சொல்வார்கள். நான் உண்மையைச் சொல்கிறேன். இருபத்தொன்று." தோற்றத்தைப் பார்க்க, கிட்டத்தட்ட உண்மை என்றே தோன்றியது. (இந்த வரியின் மூன்றாவது வார்த்தையை அடிக்கோடிட்டுப் படிக்கவும்.)

●● தூர்தர்ஷனில் வயலும் வாழ்வும் நிகழ்ச்சியை விவசாயி அல்லாத எத்தனை பேர் பார்க்கிறார்கள் என்று தெரியவில்லை. இதர தையா தக்கா ஆட்டங்களைக் காட்டிலும் சிறப்பாகவே இருக்கிறது. வியாழக் கிழமை நிகழ்ச்சியில் தென்னை,

●● டிஸ்கவரியில் காட்டில் வசிக்கிற சிறுவர், சிறுமிகளைப் பற்றி ஒரு நிகழ்ச்சி வந்தது. ஓரிரவு. பொடிப் பையன்கள் காண்டாமிருகத்துடனும் காட்டு யானைகளுடனும் கொஞ்சிக் குலவாததுதான் மிச்சம். அத்தனை நெருக்கமான வாழ்க்கை. 'பயமா? அதெல்லாம் இல்லை. என் தங்கைதான் ராத்திரிகளில் மட்டும் சப்தம் கேட்டால் மிரண்டு எழுந்து கொள்வாள்' என்கிறான் சுமார் பத்து வயதுச் சிறுவன். தங்கை? நாலு வயசு இருக்கும். துறுதுறுவென்று ஏணி வைத்த மரவீட்டில் ஏறி அங்கிருந்து யானையின் துதிக்கையைத் தொட்டுச் சீண்டுகிறாள். நிஜ டார்ஜான் சுந்தர சுந்தரிகள்!

●● ஜீ டீவி. ஹிந்தி நியூஸ் – புதிய மணிப்பிரவாளத்தில் பெருக்கெடுக்கிறது! "தோனோ ஹவுஸஸ் ஆஃப் பார்லிமெண்ட் மே புரொடஸ்ட் கியாதா...!" போன்ற வாக்கியங்களைக் கேட்கக் கேட்க வேடிக்கையாகத்தான் இருக்கிறது. அதே 'மணிப்பிரவாளத்தில்' சொல்வதானால் விஷுவலில் எத்தனைக்கெத்தனை ஸ்ட்ராங்கோ, லாங்குவேஜில் அத்தனைக்கத்தனை வீக்!

●● ஸ்டார் ஸ்போ [illegible] வில் ஒரு மோட்டார் சைக்கிள் பந்தயம். [illegible] ஓய்ஸ்' என்று கண் மூடித்தனமான வேகத்தில் கடக்க முடியாத படிக்குப் பாதை முழுவதுமே மேடுபள்ளம்! சென்னை சாலைகள் தோற்றன போங்கள்! மோ. சைக்கிள்கள் விழுந்து எழுந்து, விழுந்து எழுந்து... ஏதோ ஒரு டஜன் பந்துகளைத் தட்டி விட்டது போல் துள்ளித் துள்ளி வர, பார்ப்பதற்கே உடம்பை வலித்தது. ஓட்டியவர்களுக்கு ஒரு மாதமாவது ஒத்தடம் கொடுக்க வேண்டியிருந்திருக்கும்!

— 'டிஷ்'

# நடைபாதைக் கடைகளை அகற்றுவது

**என்.எஸ்.சி. போஸ் ரோடு, ரத்தன் பஜார் சந்திப்பு ஆகிய இடங்களிலிருந்த சுமார் 1500 நடைபாதைக் கடைகளை அகற்றியது சென்னைமாநகராட்சி. காரணம், சுப்ரீம் கோர்ட் உத்தரவு! அகற்றப்பட்ட இந்தக் கடைகள் இன்னும் எத்தனை நாளைக்கு மீண்டும் வராமலிருக்கும்? இந்தக் கேள்விக்கு மாம்பலம் ரங்கநாதன் தெருவிலுள்ள நிரந்தரக் கடைகளின் உரிமையாளர்கள் நொந்து போய்ப் பேசுகிறார்கள்...**

"ரங்கநாதன் தெருவிலுள்ள நடைபாதைக் கடைகளை அகற்றுவதற்காக நாங்களும் கடந்த 83-லிருந்து ஹைகோர்ட், சுப்ரீம் கோர்ட் என்று போராடிக் கொண்டேதான் இருக்கிறோம். ஒன்றும் நடக்கவில்லை. கோர்ட் உத்தரவிடுகிறபோது வேறு வழியின்றி அகற்றுவார்கள். பிறகு சில நாட்களிலேயே மீண்டும் பழையபடி நடைபாதைக் கடைகள் வந்துவிடும்!" என்று விரக்தியடைந்து பேசுகிறார்கள், கடைக்காரர்கள்.

"கடந்த ஆண்டு ஆரம்பத்திலேயே ரங்கநாதன் தெருவிலுள்ள நடைபாதைக் கடைகளை அகற்றுமாறு ஹைகோர்ட் உத்தரவிட்டது. அகற்றப்படுகிற கடைகள் மீண்டும் வராமலிருப்பதற்காக தெருவின் இரு முனைகளிலும் இரண்டு போலீஸ் பூத்களை அமைக்குமாறும் கோர்ட் உத்தரவிட்டது. பூத் அமைப்பதற்கான செலவுத் தொகையாக 78,000 ரூபாயை கடைக்காரர்களின் சங்கம் தரத் தயாராயிருந்தும் இதுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை!" என்கிறார்கள்.

கோர்ட் உத்தரவைக் கூட அரசு புறக்கணிப்பதற்கு அல்லது கண்டுகொள்ளாமல் இருப்பதற்கு என்ன காரணம்?

'வோட்டு' என்பதுதான் வெளிப்படையான ரகசியம். அரசியல்வாதிகளுக்கு வோட்டு; அதிகாரிகளுக்கு? மாமூல்! மாமூலோடு நடைபாதைக் கடைக்காரர்களிடம் வாங்குகிற பொருள்களையும் இலவசமாகத்தான் வாங்கிக் கொள்கிறார்கள், சம்பந்தப்பட்ட அதிகாரிகள்.

வெறும் நடைபாதையில் கடை வைத்து மாமூலெல்லாம் கொடுத்துக் கொண்டிருந்தால் கட்டுப்படியாகுமா என்று கேட்டால், "தாராளமாகக் கட்டுபடியாகிறது. அதனால்தான் இந்த நடைபாதைக் கடைகளில் கூட இருபதாயிரம் ரூபாய், முப்பதாயிரம் ரூபாய் என்று பகடி புகுந்து விளையாடுகிறது!" என்கிறார்கள்.

ஆமாம். நினைத்தவர்களெல்லாம் போய் எந்தவொரு நடைபாதையிலும் கடை போட்டு விட முடியாது. ஆண்டாண்டு காலமாகப் பலரும் ஒரேயிடத்தில் தொடர்ந்து போட்டுக் கொண்டு வருவதால் ஏறத்தாழ அந்த இடங்களெல்லாம் அவரவருக்கும் பட்டா போட்டுக் கொடுத்து விட்ட மாதிரிதான். எனவே, ஒருவரைக் காலி செய்யச் சொல்லிவிட்டுத் தான் அங்கு இன்னொருவர் கடை போட முடியும். அப்படி காலி செய்வதற்குத்தான் ஆயிரக்கணக்கில் பகடி கொடுக்க வேண்டியிருக்கிறது!

நடைபாதைக் கடைகளால் அந்தத் தெருவிலுள்ள கடைக்காரர்களுக்கு வேண்டுமானால் இடைஞ்சலாக இருக்கலாம். அதனால் பொது மக்களுக்கு என்ன இடைஞ்சல்? ரங்கநாதன் தெருவையே எடுத்துக் கொண்டால், அங்கே போய்ப் பல்வேறு பொருட்களையும் காய்கறிகளையும் வாங்கி வருவதைப் பலரும் தங்கள் தினசரி வழக்கமாகக் கொண்டிருப்பதும் உண்மைதானே?

கட்டடங்கள் கட்டிக் கடை வைத்திருப்பவர்களைப் போல இவர்களுக்குக் கடை வாடகை போன்ற செலவுகள் இல்லாததால் தாங்கள் விற்கிற பொருட்களையும் கடைகளில் விற்பதை விட மலிவான விலைகளில்தானே விற்கிறார்கள்! இது பொது மக்களுக்கு நன்மை பயக்கிற ஒரு விஷயம்தானே?

## நாடகமா, நிஜமா?

இந்தக் கேள்விகளை ரங்கநாதன் தெருவி லுள்ள ஒரு கடைக்காரரிடம் கேட்டபோது, "மேலோட்டமாகப் பார்த்தால் இப்படித்தான் தோன்றும். மார்க்கெட்டில் விற்பதை விட இங்குள்ள நடைபாதைக் கடைக்காரர்கள் மலிவான விலையில்தான் காய்கறிகளை விற்கிறார்கள். ஆனால் எடை? ஒரு கிலோ வாங்கினால் 750 கிராம்தான் இருக்கும். வாங்குபவருக்குத் தெரியாமல் ரொம்பவும் சாமர்த்தியமாக இவர்கள் எடைகளைக் குறைத்துத்தான் போடுகிறார்கள். இதை யாருமே கவனிப்பதில்லை!" என்கிறார் அவர்.

கூடவே, "நாங்களும் சரி, நீதிமன்றமும் சரி இவர்களுக்கு மாற்று ஏற்பாடுகள் எதையுமே செய்யாமல் காலி செய்யச் சொல்லவில்லை. இந்தத் தெருவுக்குப் பக்கத்திலேயே இருக்கிற மற்ற இடங்களில் இவர்கள் தங்கள் கடைகளை வைத்துக் கொள்ள அதிகாரிகள் ஏற்பாடு செய்து தர வேண்டும் என்றுதான் நீதிமன்றமும் சொல்லியிருக்கிறது. ஆயினும் இவர்களில் யாரும் அங்கே போகத் தயாராயில்லை. கேட்கப் போனால், 'எங்களிடம் வியாபாரம் செய்ய வருகிற கஸ்டமர்கள்தான் போனால் போகிறதென்று உங்கள் கடைகளிலும் பொருள் கள் வாங்க வருகிறார்கள்!' என்று சொல் கிறார்கள் இந்த நடைபாதைக் கடைக் காரர் கள்!" என்று கூறுகிறார்கள் கடைக்காரர் கள்.

ஆக மொத்தம் கோர்ட் உத்தரவுகள் வந்தால் கூட தாற்காலிகமாகத்தான் இது போன்ற கடைகள் காலி செய்யப்படுகின் றனவே தவிர, நிரந்தரமாக அல்ல. நிரந் தரத்துக்கான ஒரேயொரு வழி, இதுபோல் பொது இடங்களை அத்துமீறி ஆக்ரமித்துக் கொண்டு வியாபாரம் செய்யும் நடைபாதைக் கடைக்காரர்களிடம் எந்தவொரு பொருளை யும் வாங்க மாட்டேன் என்று ஒவ்வொருவரும் சபதம் எடுத்துக் கொள்வதுதான். இதெல்லாம் நடக்கிற காரியமா என்ன?

எனவே, நடைபாதைக் கடைகளை மாநகராட்சி அப்புறப்படுத்துகிறது என்பதெல் லாம் வெறும் நாடகமே தவிர வேறில்லை. இதுதான் ரங்கநாதன் தெரு நமக்குத் தெரிவித்திருக்கிற அனுபவம். இதையும் மீறி நடைபாதைக் கடைக்காரர்களுக்குத் தனியே இடம் ஒதுக்கி நிரந்தரமாக அங்கு இடம் பெயரச் செய்தால், புதிய மேயர் ஸ்டாலினை வார்த்தைகளைத் தேடித் தேடிப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

- பிரின்ஸ்

படம் : பேஜர் கே. மூர்த்தி



"ஹலோ, கல்கி!"

"......................................................................

......................................................................

நாளை காலை ஆறு மணிக்கு உங்க ஆபீஸ்ல குண்டு வெடிக்கப் போகிறது!"

- புள்ளியிட்ட வரிகளில் சொல்லவே நா கூசுகிற கெட்ட வார்த்தைகளில் நமக்கு அர்ச்சனை, கடந்த வியாழன் காலை நாம் அலுவலகத்துக்கு வந்ததுமே! அதைத் தொடர்ந்தும் அதுபோலவே சில தொலைபேசி மிரட்டல்கள்.

மாலை ஆறரை மணிவாக்கில் வந்தவாசியிலிருந்து, "சார், கல்கி பிரதிகளையெல்லாம் வாங்கி எரிக்கறாங்க சார்!" என்று நமது ஏஜெண்ட் டெலிபோன் செய்தார்.

இதற்கெல்லாம் என்ன காரணம்? பா.ம.கவினர் சென்னையில் நடத்திய

# நமது தலையங்கமும் மிரட்டல் போன்களும்!

'ஈழத்தமிழர் பாதுகாப்பு மாநாட்டில்' பேசப்பட்ட விடுதலைப் புலிகள் ஆதரவுப் பேச்சுக்களை வைத்து, அது 'தேசவிரோத மாநாடு' என்று நாம் எழுதிய தலையங்கம்தான்!

ராஜீவ்காந்தி கொலை வழக்கில் குற்றம் சுமத்தப்பட்டிருக்கிற விடுதலைப் புலிகள் இயக்கத்தை - அதுவும் நம் நாட்டில் தடைசெய்யப்பட்டிருக்கிற அந்த இயக்கத்தை - பா.ம.க. ஆதரித்துப் பேசுவதைத்தான் நாம் கண்டித்து எழுதினோமே தவிர, பா.ம.கவினர் மேலோ அதன் தலைவர்கள் மேலோ தனிப்பட்ட விரோதம் கொண்டு அல்ல! இந்த நிலையில் நமக்கு எதற்காக மிரட்டல்கள்?

டாக்டர் ராமதாஸ் அவர்களிடமே இதுபற்றி விளக்கம் கேட்டு விடலாம் என்று

அவரது திண்டிவன இல்லம் மற்றும் கிளினிக் ஆகியவற்றின் தொலைபேசிகளில் தொடர்பு கொண்டபோது, வெளியூர் சென்றிருக்கிற அவர், மறுநாள் (30.11.96) சென்னைக்கு வருவதாக அவர் வீட்டிலுள்ளவர்கள் தெரிவித்தார்கள். மறுநாள் சென்னையில் தொடர்பு கொண்டபோது, அவர் முதல் நாள் இரவு சென்னைக்கு வந்து விட்டு அதிகாலையிலேயே புறப்பட்டுப் போய் விட்டதாகவும் சொன்னார்கள்.

மீண்டும் திண்டிவனத்துக்குத் தொடர்பு கொண்டு பேசியபோது, 'அவர் ஊருக்கு வர ஒரு வார காலத்துக்கு மேலாகும்'' என்று பதில் வந்தது.



• கமிஷனர்

**"அங்கே பேசப்பட்ட பேச்சுக்கள் எல்லாமே ரெகார்ட் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றை நுணுக்கமாக ஆராய்ந்து வருகிறோம். நிச்சயமாகச் சட்டப்படியான நடவடிக்கைகளை எடுப்போம்!"**

எனவே வேறுவழியின்றி, சென்னை நகர போலீஸ் கமிஷனர் பி.கே. ராஜகோபாலன் அவர்களைச் சந்தித்து விஷயத்தைச் சொன்னோம். கேள்விகளாகவும் கேட்டோம்!

"விடுதலைப்புலி ஆதரவுப் பேச்சு ஏதாவது அக்கூட்டத்தில் இடம்பெற்றால் நடவடிக்கை எடுக்கப்படும்' என்று போலீஸ் துறை எச்சரித்த பிறகும் கூட அப்படிப்பட்ட பேச்சுக்களே அக்கூட்டத்தில் இடம்பெற்றன. நீங்கள் ஏதும் நடவடிக்கைகள் எடுத்ததாகத் தெரியவில்லையே?"

"அங்கே பேசப்பட்ட பேச்சுக்கள் எல்லாமே ரெகார்ட் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றை நுணுக்கமாக ஆராய்ந்து வருகிறோம். நிச்சயமாகச் சட்டப்படியான நடவடிக்கைகளை எடுப்போம்!"

"இதுபோன்ற விஷயங்களில் உங்களால் சுதந்தரமாகச் செயல்பட முடிகிறதா?"

"எங்களுக்கு முழு சுதந்தரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சட்டத்தை மீறுபவர்கள் மீதான நடவடிக்கைகளை நாங்கள் சுதந்தரமாகத்தான் எடுக்கிறோம்; எடுப்போம்!"

"பா.ம.கவினர் நடத்திய மாநாட்டில் விடுதலைப் புலிகளுக்கான ஆதரவுப் பேச்சுத்தான் பேசுவார்கள் என்பது அனைவருமே எதிர்பார்த்த ஒன்று என்கிற நிலையில், போலீஸ் துறை இதை எதிர்பார்க்கவில்லையா என்ன? ஏன் அக்கூட்டம் நடப்பதற்கு அனுமதி வழங்கினீர்கள்?"

"அவர்கள் அனுமதி கேட்டது 'ஈழத்தமிழர் பாதுகாப்பு மாநாடு' நடத்துவதற்குத்தான் என்கிற நிலையில் நாங்கள் எப்படி அனுமதி மறுக்க முடியும்?"

"ஆனாலும் நடந்தது விடுதலைப்புலிகள் ஆதரவு மாநாடுதானே!"

"அத்தனை பேச்சுக்களையும் ரெகார்ட் செய்திருக்கிறோம். நான் முன்பே சொன்னபடி சட்டம் நிதானமாகத்தான் செயல்படும் என்றாலும் கண்டிப்பாகச் செயல்படும். உங்கள் அலுவலகத்துக்கு வருகிற மிரட்டல் தொலைபேசிப் பேச்சுக்களை நாங்கள் உடனடியாகக் கண்காணித்து நடவடிக்கை எடுக்கிறோம். கவலையே வேண்டாம். பத்திரிகைச் சுதந்தரத்தைப் பாதுகாப்பது எங்கள் கடமை!" என்றார் கமிஷனர்.

வெள்ளை சுரிதார். ரிப்பன் கட்டிய இரட்டைப் பின்னல். விரல்களில் உருளும் பால்பாயின்ட் பேனா. ஓரிடத்தில் நிற்காமல் துடிதுடித்துக் கொண்டு, "எஸ் மேம். எஸ் மேம்" என்று பிரின்ஸிபாலிடம் பவ்யம் காட்டுகிற சராசரி ப்ளஸ்டு மாணவி போலத்தான் தெரிந்தார், பள்ளியில் பார்த்த போது.

"படிப்பிலும் சரி; பாட்டிலும் சரி. ரொம்பப் பிரகாசமாக இருக்கிறாள். இப்போதெல்லாம் ரெக்கார்டிங் அது இது என்று அடிக்கடி ஸ்கூலுக்கு மட்டம் அடித்து விடுகிறாள். எங்கள் பள்ளி மாணவி, பெரிய பாடகியாக வந்தால் சந்தோஷம்தானே? ஹரிணி பற்றி எங்களுக்கெல்லாம் மிகவும் பெருமை!" என்றார் பத்மா சேஷாத்ரியின் பிரின்ஸிபால். (பாடும் குரல் கெட்டுவிடக் கூடாதே என்பதற்காகப் பள்ளி கேன்டீனில், அவருக்காக ஃப்ரிட்ஜில் வைக்காத குளிர்பானங்கள் தனியே எடுத்து வைக்கிறார்களாம்!)

ஹரிணி?

நிலா காய்ந்தபோது அறிமுகமாகி, டெலிபோன் மணி போல் உலகெலாம் சிரித்து, ரகுமானிலிருந்து ராஜாவரை; கீரவாணி, தேவாவிலிருந்து வடக்கே அனுமல்லிக் வரை அத்தனை இசையமைப்பாளர்களையும் கவர்ந்து, வெகுவேகமாக முன்னணிக்கு வந்து கொண்டிருக்கும் பின்னணிப் பாடகி.

'சங்கம்' என்கிற இசைக்குழு நடத்திய போட்டியில் தொடர்ந்து நான்கு வருடங்கள் பரிசு பெற்று, அதன் மூலம் ரகுமான் கவனத்தைக் கவர்ந்தவர் ஹரிணி.

சுகாசினியின் 'இந்திரா'வில் 'நிலா காய்கிறது' பாடி, அறிமுகமான பின் ஹரிணிக்கு ஒரு சின்ன இடைவெளி விழுந்திருக்கிறது. அப்புறம் இந்தியன். டெலிபோன் மணியின் பிரசித்தம் பற்றிச் சொல்லத் தேவையில்லை.

சுசீலா, ஜானகி, சித்ரா, சொர்ணலதாவுக்குப் பிறகு விழுந்த இடைவெளிக்கு ஓர் இனிய குரல் வந்து சேர்ந்து விட்டது என்று திரையுலகமே தீர்மானிக்க, அப்புறமும் ஹரிணியைக் கொஞ்ச நாள் காணவில்லை.

ஏன் இப்படி விட்டு விட்டுப் பொழிகிறார், மெட்ராஸ் மழை மாதிரி? ஹரிணியிடமே கேட்டபோது, "அப்படியா தெரிகிறது? நான் அப்படி நினைக்கவில்லை. தொடர்ந்து பாடிக் கொண்டுதான் இருக்கிறேன். வரப்போகிற ஆனந்தம், உல்லாசம், காதல் கிராமம், நேருக்கு நேர் உள்ளிட்ட பல படங்களில் பாடியிருக்கிறேன். இருபத்தைந்து பாடல்கள் தாண்டி விட்டேன்" என்றார் குதூகலமுடன்.





படபடவென்று டைப்ரைட்டர் மாதிரி பேசுகிறார். பாட்டில் மட்டுமல்ல; இயல்பிலும் டெலிபோன் மணிச் சிரிப்புதான் எப்போதும். அப்பா, அம்மா இருவருமே பாடகர்கள் அல்ல. சங்கீத ஞானமும் அத்தனை தூரம் இல்லை. ஹரிணியின் இசையார்வத்துக்கு ரிஷி மூலம் அவரது தாத்தா. நாடகம், பாட்டு என்று அந்தக் காலத்தில் கொஞ்சம் பிரகாசித்தவர்.

ஆனால் ஹரிணி இசை பயின்றது அவரிடமல்ல. ராதா விஸ்வநாதனிடம். பிறகு

(இப்போதும்) சுதா ரகுநாதன்.

கர்நாடக சங்கீதத்தின் ஆழத்தை இவர்களிடமும் அகலத்தை பத்மா என்கிறவரிடமும் பயின்று வருகிற ஹரிணி, சினிமாவில் மட்டுமல்ல; சாஸ்திரிய மேடைக் கச்சேரிகளிலும் ஈடுபட்டு வருவதாகச் சொன்னபோது கொஞ்சம் ஆச்சர்யமாக இருந்தது.





"எனக்குத் தெரியும். இரண்டும் எதிரெதிர் துருவங்கள். இரண்டுக்குமான விதிமுறைகள், பயிற்சி, பாடம் எல்லாம் வேறு வேறுதான். சினிமாப் பாட்டு பாடுபவர்களால் மேடைக் கச்சேரிகளில் பிரகாசிக்க முடிவது கஷ்டம் தான். இருப்பினும் என்னால் இர்ண்டிலும்



கலபமாகவே காலூன்ற முடிகிறது. அது இறைவன் அருள்!" என்கிறார் அடக்கமாக.

ஹரிணியின் மேடைக் கச்சேரிகளில் கட்டாயமாக டெலிபோன் மணியும் நிலா காய்கிறதும் பாட வேண்டி வருகிறதாம்.

"ரசிகர்கள் விடாப்பிடியாகக் கேட்கிறபோது நான் என்ன செய்ய முடியும்?" என்கிறார், குழந்தையாக.

கர்நாடக இசை மேடையில் சினிமாப் பாடலா என்று முகம் சுளிப்பார்களே என்பது பற்றியெல்லாம் தமக்கு யோசிக்க யாரும் அவகாசம் தருவதில்லை; பாடாமல் விடுவதில்லை என்கிறார்.

"அந்தப் பாட்டு பிரபலமான பின் பள்ளியில் கூட ஒரே கலாட்டாதான். வகுப்பில் டெலிபோன், செல்லுலர் போன் பற்றியெல்லாம் ஏதாவது பேச்சு வந்தால் போதும். உடனே என்னை ஒருமாதிரி புன்னகையுடன்

# ஓயாமல் சிரிக்கும் டெலிபோன் மணி!

பார்ப்பார்கள்!"

ஹரிணி படிக்கும் அதே பத்மா சேஷாத்ரியில்தான் மகாநதி ஷோபனாவும் படிக்கிறார்.

"அவர் எனக்கு இரண்டு வருடம் ஜூனியர். பள்ளியில் சினிமா பற்றியெல்லாம் நாங்கள் பேசிக் கொள்வதில்லை. அவரவருக்கு அவரவர் பாடம், படிப்பு!"



''அடிக்கடி கனவுலே கல் உடைக்கிற மாதிரி கனவு வருதுங்க, ஒருவேளை ஜெயிலுக்கு போயிடுவேனோன்னு பயமா இருக்கு...''

''சேச்சே... கல் உடைச்சுட்டு களி சாப்பிடற மாதிரி சேர்ந்து கனவு வந்தாத்தான் பயப்படணும்!''

– அரிச்சந்திரன்



"உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிட்டதிலேர்ந்து ஒருநாள் கூட சுகப்படலை."

"இந்த ஒரு விஷயத்திலாவது நம்ம ரெண்டு பேருடைய எண்ணமும் ஒண்ணா இருக்குதே! சந்தோஷப்படு!"

– ஏழ்வரைக்கடியான்



''அதெப்படிங்க உங்களுக்கு மட்டும் பாத்ரூமில் கவிட்ச் போட்டா பெட்ரூமில் லைட் எரியுது...?''

''அதுதாண்டி ரத்தத்துல ஊறிப் போன எங்க கட்சி கட்டுப்பாடு! வீட்டிலேயும் எப்படி வேலை செய்யுது பாரு!''

– பழ. சேதுராமன்

இசைக்கு அப்பால் ஹரிணியின் உலகம் மிகவும் சிறியது. விளையாட்டு, கதைப் புத்தகங்கள், சினிமா, அரட்டை என்று எதுவும் இல்லை என்கிறார்.

"கிரிக்கெட் மேட்ச் பார்க்கப் பிடிக்கும். நான் டெண்டுல்கரின் விசிறி" என்கிறார்.

மேட்ச் பார்க்கிற விஷயத்தில் சில குழந்தைத்தனமான சென்ட்டிமென்ட்டெல்லாம் வைத்திருக்கிறார்.

"நான் எழுந்து போனால்தான் டெண்டுல்கர் நிறைய ரன் அடிப்பார்!"

ரெக்கார்டிங்குக்காகப் பள்ளிக்கு மட்டம் போடுவது பற்றிக் கேட்டபோது "அதனால் என் படிப்பில் குறை இருக்காது. இசை அளவுக்கு எனக்குப் படிப்பும் முக்கியம்" என்கிறார் உறுதியுடன்.

ஹரிணி இப்போது பிளஸ் டூ. பப்ளிக் எக்ஸாம் என்பதால் யோசித்தே பாடல்கள் பாட ஏற்பதாகச் சொன்னார்.

"ஆனால் மணிரத்னம், வஸந்த் போன்ற பெரிய டைரக்டர்கள் கூப்பிடும்போது மறுக்க எப்படி மனசு வரும்? ஆனந்தம், நேருக்கு நேர் படங்களில் பாடியது மறக்க முடியாத விஷயம்" என்கிறார்.

உல்லாசம் படத்தில் கார்த்திக் ராஜா இசையில் பாடியிருக்கிற இரண்டு பாடல்களை மிகவும் எதிர்பார்ப்பதாகச் சொன்னார். அவற்றில் ஒன்றை நாம் கேட்டதாகச் சொன்னதும், "எப்படி வந்திருக்கிறது?" என்று விழிகள் விரியக் கேட்கிறார். "பிரமாதம்" என்றதும் பூரித்துப் போகிறார். "பரீட்சை முடிந்ததும் இன்னும் சிறப்பாக, உற்சாகமாகப் பாட முடியும்!" என்கிறார்.

பிளஸ் டூவுக்கப்புறம் முழுக்க முழுக்கப் பாட்டுதானா என்று கேட்டால், "அது எப்படி படிப்பை விடுவது? எனக்கு சி.ஏ. படிக்கிற ஆசை இருக்கிறது!"

ஆனாலும் பின்னணிப் பாடகியாகத்தான் தன் வாழ்க்கை இருக்கும் என்பதில் உறுதியாக இருக்கும் ஹரிணியின் ஃபேவரட் ஸிங்கர் ஆஷா போஸ்லே.

"தமிழில்?"

நீண்ட யோசனைக்குப் பின், "எல்லோரும்!"

கலகலவென்று டெலிபோன் மணி போலவே சிரிக்கிறார்.

ஒரு விஷயம். ஹரிணி வீட்டில் டெலிபோன் இல்லை!

– **ஜி.எஸ்.எஸ்.**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**

# "முதுகுவலி முட்டுக் கட்டையைப் போட்டுவிட்டது!"

**தமிழ்நாட்டில் மட்டுமின்றி, மத்தியிலும் சரண்சிங் பிரதமர் பொறுப்பேற்றதும் அவரது அமைச்சரவையில் இடம்பெற்றிருந்தார் சத்தியவாணி முத்து. இப்போது எப்படி இருக்கிறார்?**

"என்னையெல்லாம் கூட பத்திரிகைக் காரர்களுக்கு ஞாபகம் இருக்கிறதா என்ன?" என்று ஆச்சரியப்பட்டுப் பேசினார் திருமதி சத்தியவாணிமுத்து.

"என்ன! பாலிடிக்ஸிலிருந்து ஒதுங்கி விட்டீர்களா?"

"தீவிர பாலிடிக்ஸில் இல்லை என்பது உண்மைதான். ஆனால் அரசியலை விட்டு, ஒதுங்கி விடவில்லை. இப்போதும் நான்தான் தி.மு.க.வின் ஆதி திராவிட நல உரிமைப் பிரிவினுடைய செயலாளர். மூன்று வருஷங்களுக்கு முன்னால், முதுகுவலி ஆரம்பித்தது. எத்தனையோ டாக்டர்கள் பார்த்தார்கள். ஆபரேஷன் செய்தால் சரியாகி விடும் என்றார்கள். ஆபரேஷனும் முடிந்து விட்டது. ஆனால் வலிதான் போகவில்லை."

"உடல்நிலை காரணமாகத்தான் இந்தத் தேர்தலில் போட்டியிடவில்லையா?"

"ஆமாம்! அந்தக் காலத்தில், தேர்தல் என்றால், தொகுதி முழுக்கச் சுற்றி வந்து, மக்களைச் சந்தித்து வோட்டு கேட்போம். ஓய்வு, ஒழிச்சல் கிடையாது. அது மாதிரி பிரசாரம் செய்வதற்கு என் உடல் நிலைமை இடம் தராது என்ற எண்ணத்தில் நான் தேர்தலில் நிற்பதற்கு டிக்கெட் கேட்கவில்லை. ஆனால், இந்தத் தேர்தலில், நின்றிருந்தால், கஷ்டப்படாமல், வெகு சுலபமாகவே ஜெயித்திருக்கலாம் என்று நினைக்கிறேன். ஜெயலலிதா மீது மக்களுக்கு ஏற்பட்ட வெறுப்புதான் இதற்குக் காரணம். எங்கள் அண்ணாநகர் தொகுதியில் போட்டியிட்டு, வெற்றி பெற்ற அமைச்சர் ஆற்காடு வீராசாமி கூட வீடு வீடாகப் போய் வோட்டு கேட்டுப் பிரசாரம் செய்யவில்லை."

"ஆரம்பம் முதலே தி.மு.க.விலிருந்த நீங்கள் ஏன் அ.தி.மு.க.வுக்குப் போனீர்கள்?"

"தி.மு.க. அமைச்சரவையில் இடம் பெற்றிருந்த நான், தாழ்த்தப்பட்ட மக்கள் நலனுக்காக மத்திய அரசு ஒதுக்கீடு செய்யும் நிதி, பிற திட்டங்களுக்குச் செலவிடப்படுவதை ஏற்றுக் கொள்ள முடியாமல் தி.மு.க.வை விட்டு விலகி, 'தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழகம்' என்ற கட்சியை ஆரம்பித்தேன். மூன்றாண்டுகள், ரொம்ப கஷ்டப்பட்டு நடத்திக் கொண்டிருந்தேன். குறிப்பாக நிதி நெருக்கடி, அந்தக் கட்டத்தில், எம்.ஜி.ஆர். என்னை அ.தி.மு.க.வில் சேர அழைத்தார். நானும் அ.தி.மு.க.வில் இணைந்தேன்."

முதல் முறையாக 1957-ல் நடந்த சட்டசபைத் தேர்தலில் போட்டியிட்டு வென்ற பதினைந்து தி.மு.க.வினரில் சத்தியவாணி முத்துவும் ஒருவர். அப்போது கலைஞர், ப.உ.ச., ஆசைத்தம்பி ஆகியோரெல்லாம் சட்டசபையில் இவரது சகாக்கள். தொடர்ந்து இவர் போட்டியிட்டு வென்றது சென்னையில் பெரம்பூர் தொகுதி.



• சத்தியவாணி முத்து

# ஜாலி போட்டி - 15 முடிவு

இரண்டு பொருளில் உபயோகமாகும் அந்த ஐந்து சொற்கள்:

1. குழல் 2. குமரி 3. நகை 4. கூட்டு 5. கவலை.

சரியான விடை எழுதி குலுக்கலில் தேர்வாகி ரூ.5000 பரிசு பெற்றவர்:

S. கணேசன்,
3/45 D, GRT தோட்டம்,
திருவாரூர்.

வாழ்த்துக்கள்.

சட்டமன்ற அனுபவம் பற்றிக் கேட்டால், சத்தியவாணி முத்து நினைவுகூறும் சம்பவம் இது :

"அப்போது காமராஜ் முதலமைச்சர். முதுகுளத்தூரில் வகுப்புக்கலவரம். பதினெட்டு கிராமங்கள் பாதிக்கப்பட்டன. கலவரத்தின் காரணமாக, பிரின்ஸ் என்ற இன்ஸ்பெக்டர், ஐந்து பேரை சுட்டுக் கொன்றது, சட்டமன்றத் தில் பெரும் பிரச்னையாகி, காங்கிரஸ் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரும் அளவுக்குப் போய்விட்டது.

"ஆனால், எதிர்க்கட்சிகளுள் ஒன்றான தி.மு.க., கலவர நடவடிக்கையின் போது நிகழ்ந்த துப்பாக்கிச் சூடு, தவிர்க்க முடியாத ஒன்று. அதற்காக ஆளும் காங்கிரஸ் கட்சியைக் குற்றம்சாட்டுவது நியாயமில்லை என்று கருதி, தீர்மானத்தின்போது நடுநிலைமை வகித்தது.

"அப்போது, தி.மு.க.வின் நிலைப்பாட்டை சட்டமன்றத்தில் விளக்கிப் பேசும் வாய்ப்பை அறிஞர் அண்ணா எனக்கு வழங்கினார். நான் பேசி முடித்ததும், காங்கிரஸ் அமைச்சரவையில் உள்துறை மந்திரியாக இருந்த கக்கன் என்னைப் பாராட்டி, நன்றி தெரிவித்தார்."

"அதுபோன்று சட்டசபையில் கண்ணியம் காக்கப்பட்ட நிலைமை இப்போது இல்லாமற் போனது ஏன்?"

"எதைக் காரணமாகச் சொல்லுவது என்றே புரியவில்லை."

"உங்கள் பிள்ளைகளுக்கு அரசியலில் ஈடுபாடு இல்லையா?"

"எனக்கு இரண்டு பெண்கள். இரண்டு பையன்கள். பெரியவனுக்கு அரசியலில் ஈடுபட ஆர்வம் உள்ளது. இந்த எலெக்ஷனில் கூட டிக்கெட் கேட்டான்; கிடைக்கவில்லை!"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
படம் : **யோகா**

# இழப்பு...



இந்த இதழ் அச்சேறுகிற நிலையில், மேதகு தமிழக ஆளுனர் சென்னாரெட்டி அவர்கள் காலமான செய்தி... அவரது மறைவு அரசியலுக்குப் பேரிழப்பு. அவரை இழந்து வாடும் அவரது குடும்பத்தாரின் துக்கத்தில் நாமும் பங்கு கொள்கிறோம். அன்னாரின் ஆன்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறோம்.

— ஆசிரியர்.

ஆக்ஸிசன் கொடுத்தா ஆச்சா..? சீக்கிரமா ட்ரீட்மெண்ட் ஆரம்பிங்க....

புயல்சேத ஆய்வுக்குழு

பிரதமர் நிவாரண நிதி

ஆந்திர புயல் சேதம்

பொறுங்க லாப் ரிப்போர்ட் வரட்டும்...




1996 டிசம்பர் 8
தாது கார்த்திகை 23
மலர் : 55
இதழ் : 19

# கல்கி


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஜனாதிபதி ஆட்சி: ஜனநாயக படுகொலையா?

உத்திரபிரதேச தேர்தலில் எந்தவொரு கட்சிக்கும் தனிப்பெரும்பான்மை கிடைக்க வில்லை. சிறிது காலம் குழம்பிவிட்டு, மத்திய அரசு, அரசியல் சாசனத்தின் 356வது பிரிவைப் பயன்படுத்தி, அந்த மாநிலத்தில் ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வர முடிவு செய்து விட்டது.

இதனை எதிர்த்து பி.ஜே.பி உறுப்பினர்கள் நாடாளுமன்றத்தில் கூச்சலும் குழப்பமும் விளைவித்திருக்கிறார்கள்.

மூன்று தினங்களுக்கு அவர்கள் தொடர்ந்து செய்த கலாட்டாவினால், பிற முக்கிய நடவடிக்கைகள் தடைப்பட்டுப் போயின. கேள்வி நேரம் வீண் விரயமாயிற்று.

அவைத் தலைவர் சாங்மா, பி.ஜே.பி. உறுப்பினர்களின் அத்துமீறல்களைக் கண்டித்ததுடன், அதையெல்லாம் படம்பிடித்துக் கொண்டிருந்த டி.வி. காமெராக்களுக்குத் தடையும் விதிக்க வேண்டியதாயிற்று.

"நாடு முழுவதும் நம்மைக் கண்காணிப்பது தெரியாதா? பொறுப்போடு நடந்து கொள்ளுங்கள்" என்று அந்த உறுப்பினர்களைக் கடிந்து கொண்டிருக்கிறார் சாங்மா.

மத்திய அரசு, ஜனநாயகத்தைத் தூக்கி குப்பையில் போட்டு விட்டுச் செயல்படுகிறது




என்பது பி.ஜே.பி.யின் வாதம். நடந்து முடிந்த தேர்தல் முடிவுகளை, உ.பி. ஆளுனர் மட்டும் இன்னும் சிரத்தையாகப் பரிசீலித்திருந்தால் இப்படியொரு நிலை உருவாகியே இருக்காது என்கிறார்கள் அக்கட்சியைச் சேர்ந்தவர்கள். '356ஐப் பிரயோகிப்பது, தவறான குறுக்கு வழி' என்கிறார்கள்.

'உ.பி. ஆளுனர், மத்திய அரசின் கைப்பாவை அல்ல; சுதந்திரமாகச் சிந்தித்துச் செயல்படக்கூடியவர். அவரை மத்திய அரசு கட்டாயப்படுத்தவில்லை' என்பது பாராளுமன்றத் துறை அமைச்சர் ஸ்ரீகாந்த் ஜனாவின் வாதம்.

இதைக் கடுமையாக மறுக்கிறார் சுஷ்மா ஸ்வராஜ் (பி.ஜே.பி). 'உ.பி. ஆளுனர், தாம் நிலைமையை முழுமையாக ஆராய்ந்து முடிவெடுக்கவில்லை என்பதைத் தாமே ஒப்புக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார். இப்படியொரு அசாதாரணமான சூழ்நிலை உருவானதற்குக் காரணமே ஆளுனரின் கோணல் பார்வைதான்' என்று கடுமையாகச் சாடியிருக்கிறார்.

ஆட்சி அமைக்க ஒரு வாய்ப்பு தரப்படவில்லை என்கிற ஆதங்கத்தில், பி.ஜே.பி மத்திய அரசை குற்றம் கூறி மூன்று நாட்கள் அவை நடவடிக்கைகளைத் தடை செய்தாலும், வாஜ்பாய் போன்றோர் சுட்டிக்காட்டியதன் பேரில் எதிர்ப்பை நிறுத்திக் கொண்டு விட்டது.

இந்த இதழ் அச்சாகும் நேரத்தில் உ.பி. பிரச்னை பாராளுமன்றத்தில் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும். விவாதம் காரசாரமாக நடந்தாலும், 356ஐப் பிரயோகிக்கும் முடிவுக்குத் தடை ஏதும் இருக்காது. அந்த முடிவுக்கு காங்கிரஸின் ஆதரவு உறுதியாகிவிட்ட நிலையில், ஐக்கிய முன்னணி அரசு அதை வெகு எளிதில் நிறைவேற்றி விடும்.







உ.பி.யில் ஜனாதிபதி ஆட்சியைப் புகுத்துவதென்பது பி.ஜே.பி உறுப்பினர்கள் அலறுவது போல் 'ஜனநாயகப் படுகொலை' அல்ல என்றாலும், ஆரோக்கியமான செயல்பாடு என்று சொல்லி விட முடியாது.

எந்தவொரு கட்சிக்கும் தனிப்பெரும்பான்மை கிடைக்காது போனாலும், அதிக இடங்களில் வென்ற கட்சி என்கிற முறையில், பி.ஜே.பி-யை ஆட்சி அமைக்க அழைத்து, பெரும்பான்மையை நிரூபிக்கும்படி ஆளுனர் கேட்டிருப்பாரேயானால், அது பழுது கூற முடியாத நடவடிக்கையாக இருந்திருக்கும்.

மிக மிக நெருக்கடியான நேரங்களில் கை கொடுப்பதற்கென்று உருவாக்கப்பட்டது 356வது சட்டப் பிரிவு. வேறு வழியே இல்லாத நிலையில் மாநில அரசு நிர்வாகத்தை மத்திய அரசே எடுத்து நடத்துவதற்கு அதிகாரத்தை வழங்குவது.

ஒரு மாநிலத்தில் முறைப்படி தேர்தல் நடத்தப்பட்டு, அதில் எந்தவொரு கட்சிக்கும் பெரும்பான்மை ஆதரவு கிடைக்கவில்லை என்பதற்காக, மத்திய அரசே தனது பிரதிநிதியைக் கொண்டு அங்கு ஆட்சி நடத்தச் செய்வதா...? அதற்கு 356ஐப் பயன்படுத்திக் கொள்வது அந்தப் பிரிவை மதிப்பிழக்கச் செய்கிறது.

அது மட்டுமல்ல, 356இன் துஷ்பிரயோகமானது, அதனை எதிர்த்தும் ஆளுனர்களை எதிர்த்தும் அறைகூவல் விடுத்து வரும் ஒரு சாராரின் வாதத்துக்கு வலு சேர்ப்பதாகவே அமைந்து விடும் அபாயம் இருக்கிறது.

அதனினும் அபாயம், இந்த நடவடிக்கை காலா காலத்துக்கும் சுட்டிக் காட்டப்படும் ஒரு தவறான முன்னுதாரணமாக நிரந்தரம் பெற்றுவிடும் என்பதுதான்.

# எதிர்ப்புகளில் போட்ட எதிர் நீச்சல்!

மாணவர் நலனுக்காகப் போராடியவர், சமுதாயத்தில் ஆதரவற்ற அடிமட்ட மக்கள் நலன் காக்கப் பாடுபடுகிறவர். சிறிது காலம் தீவிர அரசியலில் - இடது சாரிப் பொதுவுடைமை இயக்கத்தில் இருந்தவர் - இப்போது அமைதியாக அரசியலிலிருந்து ஒதுங்கி மனச் சாட்சிக்கேற்ப வழக்குகளை ஏற்று நடத்துகிறவர் - சந்துரு.

வழக்குரைஞர்களைப் பொருத்தவரை இரண்டு விதமான முன் மாதிரிகள் உண்டு. தனிப்பட்ட காரணங்கள் ஏதாவது இருந்தால் ஒழிய, மற்றபடி வருகின்ற எல்லா வழக்குகளையும் ஏற்று நடத்துவது பிரிட்டிஷ் முறை. ஆனால் அமெரிக்க முறை வேறு மாதிரியானது. அங்கே மனசுக்குப் பிடிக்காவிட்டால், மனசாட்சி இடம் தரவில்லை என்றால் அந்த வழக்கை ஏற்க முடியாது என்று ஒதுக்கி விடுவார்கள். இந்த இரண்டாவது முன் மாதிரியைப் பின்பற்றுவதால் சந்துரு சம்பாதித்தது 'பொய் வழக்குக்குப் போக மாட்டார், வம்படி வழக்கில் ஈடுபட மாட்டார்' என்கிற நற்பெயர்!

"இந்த நிறுவனத்திற்காகக் கேட்டார்கள். உங்கள் பெயரைச் சொல்லியிருக்கிறேன். அவர்களுக்காக வழக்கை நடத்துங்கள்."

தொலைபேசியில் சொன்னவர் ஒரு நீதிபதி. மிகவும் மதிப்பு வைத்திருந்த ஒரு பெரியவர். ஆனாலும் சந்துரு மறுத்தார். "ஸாரி! நான் நிர்வாகத் தரப்பில் ஆஜராவதில்லை என்று ஒரு குறிக்கோளுடன் இருக்கிறேன். இதை நான் ஏற்க முடியாது..."

எதிர்முனையில் ரிஸீவர் 'டக்'கென்று வைக்கப்பட்டது... நீதிபதியின் கோபத்தை அது வெளிப்படுத்தியது. மறுநாள் காலையில் அவரே அழைத்தார்.

"நேற்று நான் நடந்து கொண்ட முறை சரியில்லை. அப்படிக் கோபமாக ரிஸீவரை வைத்திருக்கக் கூடாது. உங்கள் கொள்கையை நான் பாராட்டுகிறேன்..." என்றார் அந்த நீதிபதி.

இப்படி தார்மீக பலத்தோடும், துணிச்சலோடும் பணியாற்றுகிறவர் வழக்குரைஞர் சந்துரு. தொழிலின் வெற்றி என்பது சம்பாதிக்கும் பணத்தின் அளவை வைத்து மதிப்பிடப்படுவதில்லை என்றும் சத்தியம் எப்போதும் நமக்குத் துணையாக நிற்கும் என்றும் சொல்கிறவர். மாறிமாறி வரும் அரசாங்கங்கள், காவல்துறை அத்துமீறல்கள் எல்லாவற்றையும், தயவுதாட்சண்யமின்றி எதிர்த்துப் போராடித் தமக்கென ஒரு முத்திரை பதித்துக் கொண்டிருப்பவர் இவர்.

தஞ்சாவூர் மாவட்டம் நாச்சியார் கோவில்காரரான சந்துரு பிறந்தது ஸ்ரீரங்கத்தில். அப்பா இரயில்வேயில் குமாஸ்தாவாக இருந்தவர். சந்துருவுக்கு ஐந்து வயதாகும் போது அம்மா காலமானார். நான்கு சகோதரர்கள் ஒரு சகோதரி. இதில் சந்துரு நாலாமவர். அப்பாவே தாயும் தந்தையுமாகப் பிள்ளைகளை வளர்த்துப் படிக்க வைத்தார். அப்பாவுக்கு உதவுவதில் பிள்ளைகள் முதலில் கற்றுக் கொண்டது சமையல்தான். வருமானம் - தகுதி அடிப்படையில் கிடைத்த படிப்

**சந்தித்த காவல் துறையினரின் அடக்குமுறை ஏராளம். கடலூரில் சந்துரு தங்க ரூம் தரக்கூடாது என்று லாட்ஜ் உரிமையாளர்கள் மிரட்டப்பட்டார்கள். சகோதரி மற்ற உறவினர் வீடுகளில் போய் 'இவனை வாபஸ் வாங்கச் சொல்லு' என்று போலீஸ் வற்புறுத்தியது...**

புதவியில் நான்கு பிள்ளைகளுமே படித்தார்கள். ஆனால் சந்துரு பட்ட வகுப்பில் சேர்ந்தவுடனேயே அப்பாவும் காலமானார்.

பள்ளியிலும் கல்லூரியிலும் முதன்மையாக இருந்தபோதிலும், மாணவர் போராட்டங்களில் கவனம் சென்றது. டாக்டராக வேண்டும் என்கிற ஆசையில் படித்து, கிடைக்காமல் தாவரவியல் பட்ட வகுப்பில் சேர்ந்தது லயோலா கல்லூரியில். அங்கு ஏற்பட்ட விடுதிப் பிரச்னைகள் தொடர்பான போராட்டம், பத்திரிகைகளில் எழுதியது, எல்லாம் சேர்ந்து நிர்வாகத்தின் கோபத்துக்கு ஆளானார். விளைவு டி.சி. கொடுத்து வெளியேற்றினார்கள். மூன்றாம் ஆண்டுப் படிப்புக்கு என்ன வழி?

கைகொடுத்தவர் தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரியில் முதல்வராக இருந்த டாக்டர் சந்திரன் தேவனேசன். 'எதற்காக வெளியேற்றினார்கள்?' என்று அவர் சந்துருவை விவரம் கேட்டபோது பத்திரிகைகளில் தாம் எழுதியிருந்த கட்டுரைகளைக் காட்டினார். 'ராடிக்கல் ரெவ்யூ' என்ற இதழில் வெளியாகியிருந்த அவற்றைப் பார்த்துவிட்டு கருத்து சுதந்தரத்தின் வெளிப்பாடுதான் என்று கருதினார் சந்திரன் தேவனேசன். சந்துரு. கல்லூரியில் சேர்ந்து படிப்பை முடித்தார்.

இதே காலகட்டத்தில் இந்தி எதிர்ப்புப் போராட்டம் - திராவிட இயக்கங்களின்பால் ஈடுபாடு. தி.மு.க., ஆட்சிக்கு வந்த பின்வர், ஓ்ந்து என். ராம், மைதிலி சிவராமன், வி.பி. சிந்தன் இவர்களின் தொடர்பில் அரசியல் திசை திரும்பியது. கல்லூரி அளவில் மாணவர்களைச் சேர்த்துத் தமிழக மாணவர் சங்கம் ஒன்று உருவானது. அதற்குச் சென்னைக் கிளை தொடங்கப்பட்டபோது அமைப்பாளராகச் சந்துரு. தொடர்ந்து 1969-இல் அகில இந்திய மாணவர் சங்கம் ஏற்பட்டபோது மாநிலச் செயலாளரானார். இப்படியே தொழிற்சங்கத் தொடர்பு, போராட்டங்கள் என்று ஈடுபட்டதால் உறவினர்களால் புறக்கணிக்கப்பட்டார். முகவரி என்றால் கட்சி அலுவலகம்தான் என்கிற அளவில் தீவிர ஈடுபாட்டோடு இருந்தார்.

ஸ்டாண்டர்டு மோட்டார் தொழிலாளர்கள் வண்டலூரிலிருந்து சென்னைக்கு வந்த பட்டினி ஊர்வலமாகட்டும், எம்.ஆர்.எப். லாக் அவுட் தடை மீறிய போராட்டமாகட்டும் அங்கே சந்துரு உண்டு. தடைமீறியதில் கைதாகிப் பதினைந்து நாள் ரிமாண்டில் இருந்தவர்களில் சந்துரு மட்டும்தான் மாணவர்.

முத்திரையாக அமைந்தது அண்ணாமலை நகர் உதயகுமார் மரணம் பற்றிய நிகழ்ச்சியை ஒட்டி ஏற்பட்ட மாநிலம் தழுவிய போராட்டம்தான். அதன் விளைவாக ஒரு விசாரணைக் கமிஷன் போட நேர்ந்தது. அதற்கு நியமிக்கப்பட்ட என். எஸ். ராமசாமி ஓர் இடைக்கால நீதிபதி என்பதால் நியாயம் கிடைக்காது என்று போராடியவர் சந்துரு. அந்தக் கமிஷன் நியமனத்தை எதிர்த்தும் வழக்குப் போட்டார். கமிஷனில் அதே நீதிபதி முன்னால் வலுவான ஆதாரங்களுடன் வாதாடவும் செய்



தார்.

அப்போது சந்தித்த காவல் துறையினரின் அடக்குமுறை ஏராளம். கடலூரில் சந்துரு தங்கரும் தரக்கூடாது என்று லாட்ஜ் உரிமையாளர்கள் மிரட்டப்பட்டார்கள். சகோதரி மற்ற உறவினர் வீடுகளில் போய் 'இவனை வாபஸ் வாங்கச் சொல்லு' என்று போலீஸ் வற்புறுத்தியது. "சுதந்தரப் போராட்ட காலம் மாதிரி, நான் பாண்டிச்சேரியில் தங்கிக் கொண்டு வேலைகளைப் பார்த்தேன்'' என்கிறார் சந்துரு.

அதே நீதிபதி என். எஸ். இராமசாமிதான், வழக்கில் சந்துரு காட்டிய ஆர்வம், அணுகுமுறையைக் கவனித்து, "நீங்கள் சட்டம் படிக்க வேண்டும்..'' என்று ஆலோசனை சொன்னார்! ஆனால் அந்தப் பரபரப்பான துடிப்பில் அதைக் கேட்கும் நிலையில் அவர் இல்லை என்பது சுவாரஸ்யம்.

இருந்தாலும், ஓர் அடையாளம் தேவைப் பட்டது. வீட்டாரை அமைதிப்படுத்தவும் மாணவர் என்கிற நிலை அவசியமானது. சட்டக் கல்லூரிதானே ஏற்ற களம்? சேர்ந்த உடனேயே அவசர நிலைப் பிரகடனம். மறுபடியும் அடக்குமுறைகள். இரண்டாம் சுதந்தரப் போராட்டம் என்று வருணிக்கப் படும் அந்த இருண்ட நாட்களில் தோன்றியது மக்கள் உரிமைக் கழகம். 'ஜனநாயகம் காப்போம்' என்று முழங்கியவாறு இருநூறு வழக்குரைஞர்கள் கட்சி வேறுபாடின்றி, நீதிமன்றத்துக்கு வெளியே கறுப்பு கவுன்களோடு ஊர்வலம் வந்தது அப்போதுதான்!

சட்டக் கல்லூரியிலும் வகுப்பில் முதல். - கல்லூரியில் முதல் மாணவன் என்கிற திறமையும் தொடர்ந்தது. வழக்குரைஞராகப் பதிவுசெய்து கொள்வது அவசியம் என்று நண்பர்கள் சொன்னார்கள்.

மூத்த வழக்குரைஞர் கே.கே. வேணுகோபால் தம்மோடு பணியாற்ற அழைத்தார். அப்போதும் மறுத்தார் சந்துரு. "நான் தொழிலாளர்களுக்காக மட்டுமே வாதாட விரும்புகிறவன். பெரிய மனுஷர்களுக்காக நீங்கள் வாதாடுவீர்கள். சரிப்படாது...''

அவசர நிலை ஏற்படுவதற்கு முன்னால், அரசியல் மேடைகளில் கூட இந்த அரசியலமைப்பை எதிர்த்துக் குரல் கொடுத்தவர் சந்துரு. "மிட்டா மிராசுகள் எழுதிய அரசியலமைப்பு - என்று பேசியதுண்டு. ஆனால் அதிகாரத்தில் உள்ளவர்கள் இப்போதிருக்கிற இந்த அரசியலமைப்பையே கூட அவமதிக்கிறார்கள் என்பதைப் புரியவைத்தது அவசர நிலை ஏற்பட்ட போதுதான். இந்த அரசிய

லமைப்பைப் பாதுகாத்தாக வேண்டும் என்று அப்போதுதான் தீர்மானித்தேன்" என்கிறார் சந்துரு.

**தொ**ழிலாளர்களுக்காக, மனித உரிமைகளுக்காக என்று மட்டுமின்றித் தாம் சார்ந்துள்ள தொழிலில் இருக்கும் வழக்குரைஞர்கள் அவதியுறும் போதும் சந்துரு முன்னின்று போராடுவார். திருப்பரங்குன்றம் வழக்குரைஞர் அய்யாத்துரை காவலர்களால் தாக்கப்பட்ட போது, நீதிமன்றங்கள் புறக்கணிக்கப்பட்டன. மாநிலம் தழுவிய போராட்டமாக அதை நடத்தியவர் சந்துரு.

83-ல் பார் கவுன்ஸில் தேர்தல். எல்லா இடங்களிலும் வாக்குப் பெற்று– அதுவும் ஓர் இடதுசாரி வழக்குரைஞர்– வெற்றி பெற்றது சந்துருதான். ஆனால் இந்திய இலங்கை ஒப்பந்தத்தை எதிர்த்து, பார் கவுன்ஸிலில் தீர்மானம் நிறைவேற்றியதற்காகப் பொதுவுடைமைக் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்!

அன்று முதல் இன்று வரை எந்த அரசியல் இயக்கத்தையும் சாராதவர் சந்துரு. முதலில் இவரைக் கண்டு தயங்கிய தோழர்கள் உட்பட அனைத்துத் தரப்பினருக்கும் வாதாடுகிறார் சந்துரு.

பார்கவுன்ஸிலில் இருந்தபோது 'வழக்குரைஞர்கள் நல நிதி' ஏற்பட உழைத்ததோடு, 'டிஸிப்ளினரி கமிட்டி' உறுப்பினராக இருந்ததும் குறிப்பிடப்பட வேண்டிய ஒன்று. பாதிக்கப்படும் வழக்குரைஞர்களுக்காக வாதாடும் அதே சந்துரு, வழக்குரைஞர்கள் தவறு செய்வதாகப் புகார் வரும்போதும் விட்டு விட மாட்டார்.

சந்துரு சந்தித்த பல முக்கியமான வழக்குகளுள் ஒன்று, 'நடைபாதைவாசிகளை' அகற்றுவது பற்றி அரசு எடுத்த நடவடிக்கையை எதிர்த்து உச்சநீதி மன்றத்தில் தொடர்ந்த வழக்கு. 'அவர்களுக்கு மாற்று ஏற்பாடு செய்யாமல் அப்புறப்படுத்தக் கூடாது' என்ற சந்துருவின் வாதம் வென்றது.

கடுமையான உழைப்பும், சத்தியத்துக்கும் மனச்சாட்சிக்கும் கட்டுப்படும் மனப்பக்குவமும் இருந்தால் எந்த எதிர்ப்பையும் அடக்குமுறையையும் சமாளிக்கலாம் என்பதற்கு நல்ல முன்மாதிரி சந்துரு.

ஆறு ஆண்டுகளுக்கு முன் காதல் திருமணம். 'பெண்' அமைப்பில் இருந்து விழிப்புணர்வுப் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட மனைவி பாரதி. இவர்களின் ஆசை அரவணைப்பில் ஒரு பெண் குழந்தை... சக்தி!

- சுப்ர.பாலன்

# ஆஹ்ஹாங்ஹாங்...




''எங்க தலைவர்கள் அத்தனை பேருக்கும் எங்களால ஜாமீன் வாங்கித் தர முடிஞ்சிருக்கு... வேற எந்த கட்சியாவது இதை சாதிச்சிருக்கா...?"




"கையைக் கீழே போடுங்க சார்... நம்ம கட்சியில சேர வர்றவங்க ஒருத்தரையும் காணும்..."




''ஊழல், போலிக் கையெழுத்து, அராஜகம் அப்படி இப்படின்னு நம்ம பேர்ல இல்லாத பொல்லாத பழியெல்லாம் சுமத்தறாங்க. அதுக்காக நாம ஆதரவை விலக்கிக்க முடியுமா என்ன.....!"




"அரசியல் சாசனத்தில் என்ன இருக்குன்றதா முக்கியம்? அதை நான் எப்படி அர்த்தம் பண்ணிக்கறேன் என்கிறது தானே முக்கியம்...

- இந்தியன் எக்ஸ்பிரஸ் ஸிண்டிகேட்

கல்கி – அனுபவ் குருப் இணைந்து நடத்திய கவிதைப் போட்டியில் ஆறுதல் பரிசு ரூ. 1,000 பெறும் கவிதை.

# எரியும் புஅணைக

- பூமித்தாயே! உன் அழுகையின்
  விழுதுகள்

  அமுதமான நீரோடைகள்
  அமிலத்தின் பாடையில் ஏற்றியதால்
  தண்ணீரும் கண்ணீர் வடிக்கிறதே!

- இளந்தென்றலே! நீ கொஞ்சிடும்
  பூஞ்சோலையும்

  நித்தம் முகம் துடைக்கும் தடாகமும்
  அழுக்கை அணிந்து
  கொண்டிருக்கிறது
  இனிஉன் பாதம் பாலைவனத்தில்
  பயணம் செய்யப்
  பழகிக்கொள்ளட்டும்.

- தேசம் விட்டு பாசத்தோடு
  உறவாய் வரும் பறவைகளே!
  உங்கள் சரணாலயம்
  மரணடைந்துவிட்டதோ!
  சங்கீத பாஷைகள் சங்கடமாய்
  ஒலிக்கிறதே!

- கார்மேகமே தாகத்துடன்
  தலைகுனிந்து தரை பார்ப்பதேன்
  உங்களுக்குத் தாலாட்டுப் பாடிய
  மரங்கள் தரணியில் இல்லை.

- எமது மக்களுக்கு
  இரு கைகளும் பத்து விரல்களும்
  கத்தியும் கோடரியுமாய் மாறிவிட்டன
  கானகத்தைத் தகனமாக்கிட ஆசை.

- பூமித்தாய் பசுமை ஆடை இழந்து
  நிர்வாணத்தை அணிந்து
  கொண்டதால்
  கண்ணில் பச்சை ரத்தம் கசிகிறது

- காடுகளுக்குக் கல்லறைகள்
  கட்டிவிட்டால்
  கருவறையே கசங்கிக் கருகிவிடும்
  பின் அகிலம் விதவையாக நிற்கும்
  வாருங்கள் அதற்கு முன்
  அவள் தாகத்திற்கும் கொஞ்சம்
  கண்ணீர் கொடுக்கலாம்.

— ஆ. முருகேசன்



• எங்கு நோக்கிலும் இயற்கை அழகுதான்

# இயற்கை அழகை அள்ளித்தரும் நேபாளம்!

● நேபாளம் செல்ல விசா தேவையில்லை. நாம் இந்தியர்கள் தான் என்பதற்கு அத்தாட்சியாக, நம்மிடம் ஏதாவது அத்தாட்சியோ, பாஸ்போர்டோ இருந்தால் நல்லது.

● நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டுவில் "குமாரி" என்ற உயிருள்ள தெய்வத்தைப் பார்க்கலாம். "நெவாரி" இன பொன் வேலை செய்யும் ஆசாரி குடும்பத்தைச் சேர்ந்த திருமணமாகாத சிறு பெண்ணை, தெய்வமாகத் தேர்ந்தெடுத்து, எல்லோரும் ஏற்றுக் கொள்ளுவது பல ஆண்டுகளாக அவர்கள் வழக்கத்தில் இருந்து வருகிறது.

● காட்மாண்டுவில் கண்ட பெரிய ஏமாற்றம் அங்கும் நம் ஊர்களைப் போல் வாகனங்களால் பாழ்படுத்தப்பட்ட புகையுடன் கூடிய மாசுபட்ட சுற்றுச் சூழல். நம் நாட்டில் தயாரிக்கப்பட்ட ஆட்டோக்களும், டெம்போக்களும் புகை மண்டலத்தை கக்கிக் கொண்டு போவதைப் பார்க்கும் போது கவலையாக இருக்கிறது. நல்ல வேளையாக "ஸாபா" என்று அழைக்கப்படும் பாட்டரியால் இயங்கும் ஒன்பது பயணிகளை ஏற்றிச் செல்லும் சுற்றுப்புறச் சூழலின் நண்பனான சில டெம்போக்களும் ஓட ஆரம்பித்திருக்கின்றன.

● நேபாளிகள் உள்ளூர் ரூபாய் நோட்டுகளைக் கசக்கி, சுருட்டி குப்பை கூளங்களைப் போல் கையாளுகிறார்கள். ஆனால் நம் இந்திய ரூபாய் நோட்டுகளை கொஞ்சம் கிழிந்தாலோ, கசங்கினாலோ வாங்க மறுத்து விடுகிறார்கள்.

● காட்மாண்டுவும் நம் நகரங்களைப் போலவே இருக்கிறது. தினசரி மின்வெட்டு, அசுத்தமான தண்ணீர், தெருவில் துப்புதல், மலஜலம் கழித்தல், சுகாதாரமில்லாத சூழ்நிலை குண்டும் குழியுமான, விளக்குகள் இல்லாத சாலைகள், அசுத்தமான உணவு வகைகள், அதிகாரிகளின் அலட்சிய மனப்பான்மை– இமாலய இயற்கை தந்த அழகிய சூழ்நிலையில் இது ஒரு பெரிய சாபக்கேடு.

● இப்படி மோசமான நிலையில் காட்மாண்டு இருந்தாலும் நேபாளம் சென்று உல்லாசப் பயணத்தை அனுபவிக்க பல வழிகள் உள்ளன: அரண்மனை பூங்காக்கள், அருங்காட்சியகம் போன்ற இடங்களுக்குச் சென்று சுற்றிப் பார்த்தல்; மலைத் தொடர்களில் ட்ரெக்கிங் செல்லுதல்; பலூன் பயணம்; நதிகளில் படகுப் பயணம் போன்ற பல விதங்களில் இமாலய இயற்கை அழகை ஆசை தீரப் பருகலாம்.

● நேபாளத்தில் பெரும்பாலோர் இந்துக்களே. ஆனால் அவர்களின் பழக்க வழக்கங்கள் கொஞ்சம் வேறு பட்டுள்ளன. இப்போதும் காளி,

துர்க்கை போன்ற பெண் தெய்வங்களுக்கு ஆடு, எருமை, கோழி போன்ற கால் நடைகளைப் பலி கொடுக்கிறார்கள். பெண்கள் கல்யாணம், பண்டிகை போன்ற விழாக் காலங்களில் சிவப்பு நிற உடைகளை அணிகிறார்கள். சிவப்பு மணிகளை சரம் சரமாகக் கோத்து, அத்துடன் "பில்லாரி" என்ற அவர்கள் தாலியையும் சேர்த்து அணிகிறார்கள். அங்கு முஸ்லீம், பௌத்த மதத்தினரும் இருக்கிறார்கள். ஆனால் மதக் கலவரங்களின்றி ஒற்றுமையாக இருப்பது ஒரு நல்ல விஷயம்.

- இந்தியாவில் உள்ள கேதார்நாத் தலம் போல் நேபாளத்தில் "முக்தி நாத்" என்ற இடத்திற்கு யாத்திரிகர்கள் திரளாகச் செல்கிறார்கள். "ஜோம் சோம்" என்ற விமான நிலையத்திலிருந்து 18 கி.மீட்டர் தூரத்தை மலைப்பாதைகளில் நடந்தே சென்றால் இயற்கை அழகை நன்றாக ரசிக்க முடியும். நடக்க இயலாதவர்கள் குதிரை மீது ஏறியும் போகலாம். எங்கு பார்த்தாலும் பனி மூடிய மலைச் சிகரங்கள், மாசில்லாத சுற்றுப்புறம், வழியெங்கும் பக்கத்திலேயே ஓடி வரும் ஆறுகள். தெய்வீக மணம் கமழும் "முக்தி நாத்" ஆலயம், மனத்திற்கு பேரானந்தத்தை அளிக்கும். விஷ்ணு, சிவன் மற்றும் பௌத்த மத கோவில்கள் ஒன்றன் பக்கத்தில் மற்றொன்று இருப்பது நேபாளத்தில் நிலவும் மத ஒற்றுமையின் எடுத்துக்காட்டு.


'குமாரி' தெய்வம்


லும்பினியிலுள்ள அசோகர் தூண்

- நேபாளத்தில் பார்த்த எல்லா இடங்களிலும் சிகரமாக விளங்கியது "மார்பா" என்ற இடம். அந்த ஊரில் உள்ள உணவகங்கள், ஹோட்டல்களின் பெயர்கள், கட்டணங்கள், அந்த ஊரின் தரக் கொள்கை- அதாவது 'உங்கள் மகிழ்ச்சிதான் எங்கள் வியாபாரம்'- தரமான, பேரம் இல்லாத வியாபார நோக்கம் போன்றவை அனைவர் மனதையும் தொடும். சுற்றுப் புறமும், வீடுகளும் குப்பை கூளங்கள் இல்லாமல் சுத்தமாக இருக்கிறது. நல்ல கழிவு நீர் வசதிகள் உள்ளன. குதிரைகளும் மற்ற கால்நடைகளும், மக்களும் செல்ல கற்களால் ஆன புழுதி இல்லாத பாதைகள். இந்த இடம் சுத்தமாக நேபாளத்தில் தனித்து நிற்பதற்குக் காரணம் அந்த ஊர் வாசிகளான "தக்காள்" இனத்தவரின் கூட்டு முயற்சி. எந்த நாட்டிலும் சுற்றுப்புற தூய்மை கூட்டு முயற்சியால்தான் முடியும் என்பதைச் சுட்டிக் காட்டுவது போல் இருந்தது.

- மறைந்த முன்னோர்களுக்கு நேபாளியர்கள் "காய் ஜாத்ரா" என்ற மாடு ஊர்வலம் நடத்துகிறார்கள். அப்போது அந்த வருடம் இறந்து போன குடும்பத்திலிருந்து, சிறுவர்களை மாடு போல் அலங்கரித்து மாடுகளுடன் ஊர்வலமாகப் போகிறார்கள்.

- புத்தர் அவதரித்தது 'லும்பினி' என்ற இடம். அங்கு அசோகர் நட்ட கல் தூண் இருக்கிறது. இங்குள்ள அமைதியான சூழ்நிலை புத்தரின் பிறந்த இடம் இதுதான் என்று உறுதி செய்தது.

- எம். ரகுபதி

6 வள்ளி, மளிகைப் பட்டியலை, ஸ்டோர் பையனிடம் கொடுத்து விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றாள். பெரிய டிபார்ட்மென்டல் ஸ்டோர் அது. மனிதவாழ்க்கைக்குத் தேவையானதும், தேவையற்றதும் ஆன அனைத்துப் பொருட்களும், அங்கு விற்பனைக்குக் கிடந்தன. காலை நேரம். ஜனங்கள், தேனடை போல, ஸ்டோர்சை இன்னும் நிரப்பவில்லை. அதுக்கு நேரம் பிடிக்கும். முகப் பவுடர், பற்பசை, தலைக்கு எண்ணெய் வகையறா மட்டுமே ஒரு ஷெல்ப் இருந்தது. அதிக எண்ணெய் வழிகிற மூஞ்சா? அதுக்கு ஒரு களிம்பு. எண்ணெய்யே வழியாத மூஞ்சா? அதுக்கும் ஒரு களிம்பு. தோலை சிவப்பாக்க வேண்டுமா, அதுக்கும் ஒரு களிம்பு, சூரிய வெளிச்சத்தில் உடல் கருகி விடுமா? கவலை இல்லை, அதுக்கும் ஒரு களிம்பு. மனிதர்களைத் தேவர்களாக்கும் சகல சஞ்சீவினி வித்தைகளும் டப்பாக்களில் அடக்கமாகி விட்டன. இதோ இந்த டப்பாவைத் திறந்து பாருங்கள். உங்களுக்கு வேண்டிய குழந்தை கிடைக்கும், அல்லது பெண்ணுக்குப் புருஷன், அல்லது புருஷனுக்குப் பெண் - இவைகள் கிடைக்கும்படி இருக்கும், என்பதான விளம்பரம் மாத்திரம்தான் இல்லை.

"என்ன வள்ளி... நீங்களாகவே சிரிச்சுக்கிறீங்க?"

வள்ளி திகைத்துத் திரும்பினாள். பிந்து நின்றிருந்தாள். ஸ்லீவ்லெஸ் ஜாக்கெட், பாப் செய்த கலைந்த முடி. பெங்களூர் பட்டுப் புடைவையுமாக.

"வாங்கக்கா. ஒன்றுமில்லை. நம் காசைப் பிடுங்க எத்தனை சாமான்கள், எத்தனை கவர்ச்சியாக. விளம்பரங்களைப் பாருங்க... எல்லாத்திலயும் சின்னப் பொண்ணுங்க, சிரிச்சுக்கிட்டு... ஏதோ இதுகள் எல்லாம் இல்லாமே, நம்ம வாழ்க்கையே அபூர்ணமாயிடும் என்கிறது மாதிரி ஒரு பிரமையைத் தோற்றுவிக்கிறாங்க, இல்லையாக்கா?"

"கரெக்ட். கன்ஸ்யூமரிசத்தோட வெற்றியே இதுதான் வள்ளி. இன்னும் இதையெல்லாம் வாங்காமே இருக்கோமேன்னு தாழ்வுணர்ச்சியை நமக்குள்ளே விதைச்சுடுவாங்க... கடன் வாங்கியாவது அதை அனுபவிக்கணும்கிற மனநிலைக்கு நம்மைத் தள்ளிடுவாங்க. நமக்கு, ஒன்றரையணா கர்ண்டி சும்மா இலவசமா கொடுத்தான்னா, நூறு ரூபாய்க்குப் புண்ணாக்கு கூட வாங்குவோமே... புண்ணாக்கு."

இந்த முறை பிந்துவும், வள்ளியுடன் சேர்ந்து சிரித்தாள். கடைப் பையனைக் கூப்பிட்டு, இரண்டு கோக் வாங்கிக் கொண்டார்கள். பிந்து கேட்டாள்.

"கந்தா சார் வீட்டுக்குத் திரும்பிட்டாரா? உடம்பு குணமாச்சுதானே?"

"ஆச்சு. திரும்பிட்டார். ஆனா, ரொம்ப மாறிட்டிருக்கார். மனைவியோடவோ, பெண்ணோடவோ பேசறதை அறவே விட்டுட்டாரு. எப்பவும் ஜன்னல் வழி தெரியற வானத்தைப் பார்த்தபடி, உக்காந்துகிட்டு இருக்கார். பார்த்தா பாவமா இருக்கு. சர்க்கஸ்லே சிங்கத்தை அடக்கற ரிங் மாஸ்டர் மாதிரி இருந்தவர், என்ன கெத்?



# பூக்கள் நனையும் மேகம்

## பிரபஞ்சன்

என்ன கார்வார்? எல்லாமே போய், ரிடையர்டு போஸ்ட்மேன் மாதிரி இருக்கார்."

"ஐயோ... சங்கடமா இருக்கு. பார்க்கணும் போல இருக்கே."

"வாங்களேன். போவோம்."

"நான்தான், தள்ளி வைக்கப்பட்டவளாச்சே, வள்ளி. என்னைப் பார்த்தா, ஏதோ சிவப்பு விளக்குக்காரி மாதிரி அல்லவா காலனி ஜனம் பார்க்குது. நீங்க மட்டும்தான், வள்ளி, என்னோட சகஜமா பேசற ஒரே பெண், இந்தக் காலனியிலே!... சரி, என்னை விடுங்க. ஜனனி என்ன சொல்றா?"

"என்ன சொல்லுவா? இந்த சின்ன விஷயத்தை இத்தனை சீரியஸா எடுத்துக்க வேணாம் எங்க அப்பான்னு சொல்றா."

"சின்னப் பொண்ணுங்க நினைப்பு இப்படித்தான் போகும். ஆனா, இதுல பரிதாபப் பட வேண்டியது சுந்தா சாருக்குத்தான். காலம் காலமா, ஒரு வழியில அவரும் அவர் முன்னோர்களும் நடந்து வந்திருக்காங்க. அது பாது காப்பான வழின்னு அவங்க நம்பறாங்க. அந்த வழி, பெரியோர்களாலே, சமூகத்தாலே அங்கீகரிக்கப்பட்டும் வந்திருக்கு. அது. அந்த நம்பிக்கை தன் மகளாலே பறிபோகும்னு, சுந்தா சார் நினைச்சுக்கூட பார்த்து இருக்க மாட்டாரு. அதுதான், இந்த தற்கொலை முடிவுக்கு அவரைத் தள்ளிடுச்சு. உண்மையில, ஜனனி, ஒரு கிறித்துவப் பையனைக் காதலிச்சது அல்ல, சுந்தா



சாரோட பிரச்னை. மாறா, தன் முன்னோர்களோட வழியை, அவர்கள் போட்டுத் தந்திருக்கிற பாதுகாப்பு வளையத்தை அவள் உடைச்சிட்டாளேன்னுதான் சுந்தா அசந்து போனார்."

பிந்து சொன்னது சரியாக இருக்கக்கூடும் என்று நம்பினாள் வள்ளி. இவ்வளவு நுணுக்கமாகப் பிறர் பிரச்னைகளைப் பார்க்கத் தெரிந்த பிந்து, ஏன், மற்றவர்களுக்கு எப்போதும் புறம் பேச விஷயதானம் செய்கிறாள். கொஞ்சம் பதமாக நடந்து கொண்டால் என்ன?

"என்ன யோசிக்கிறீங்க, வள்ளி?"

வள்ளி, மறைக்காமல், தான் யோசித்ததைச் சொன்னாள்.

பிந்து, அழகாகச் சிரித்தாள். மேல் வரிசைப் பற்கள் வெளிப்பட, அவள் சிரிப்பு இருக்கும். சற்றும் கறைபடாத வெள்ளைப் பால் அவை. அப்படியே புகைப்படம் எடுத்து, நிரந்தரப் படுத்திக் கொள்ள வேண்டும் என்று பார்ப்பவரை நினைக்கத் தூண்டும் சிரிப்பு. உள்ளத்துச் சுரங்கத்தில் முத்தும் வைரமும் போட்டு வைத்து இருப்பவர்கள் சிரித்தால், வெளிச்சமும் அழகும் வெளிப்படாமல் வேறென்ன வெளிப்படும் என்பது போல நினைத்துக் கொண்டாள் வள்ளி.

"வள்ளி, நிஜத்தைச் சொன்னீங்களே, அந்த மட்டுக்கும் நன்றி. என் மனசுக்குள்ளே ஒரு சட்டப் புத்தகம் வச்சிருக்கேன். அதுல, நான் எனக்குன்னு சில சட்டங்கள் எழுதி வச்சிருக்கேன். அதை நான் மீறுவது இல்லை. பிரச்னை என்னன்னா, நான் என் மனசுக்கு எது சந்தோஷம் தருதோ அந்தப்படி வாழ்ந்துக்கிறேன். முடியை வெட்டிக்கறேன். மாடர்னா டிரஸ் பண்ணிக்கறேன். சினிமாவுக்கும் கலைநிகழ்ச்சிகளுக்கும் போறேன். என் உத்யோக இயல்பா, நிறைய ஆண்களோட நான் பேச வேண்டி இருக்கு. பேசறேன். நான் கணவன் இல்லாமே தனியா வாழறேன். சுதந்திரமா, நானே எனக்குத் தலைவியா இருக்கேன். இது, இந்தச் சுதந்திரம் கிடைக்காத பலரையும் எரிச்சல் அடைய வைக்குது. தவிரவும், ஆண்கள், 'நேசர்' என்ன தெரியுமா? பெண்கள் கலபமா, அறிவார்த்தமா, கலகலன்னு, நவீனமா தங்களோட பழகணும்னு நினைக்கிறாங்க. ஆனா, அந்தப் பெண்கள், தங்கள் வீட்டுப் பெண்களா மட்டும் இருக்கக்கூடாதுன்னு நினைக்கிறாங்க.. அதுக்கு மாறா, பெண்கள் என்னை மாதிரிதான் இருக்க விரும்பறாங்க. ஆண்கள் அதை அனுமதிக்கிறது இல்லை. என்னைப் பெண்கள் வெறுக்கிறதுக்கு இதுதான் காரணம். போகட்டும். ஜனனியை நான் பார்த்துப் பேசணும் வள்ளி. அவளை என் வீட்டுக்கு அழைச்சு வர்றீங்களா?"

"கட்டாயம்."



"நம்ம தொகுதி எம்.எல்.ஏ. சட்ட சபையில் சூப்பரா ஒரு கேள்வி கேட்டு இருக்கார்!"

"அப்படியா...? என்ன கேட்டாராம்?"

"'என்னோட தொகுதி எது' என்று கேட்டு இருக்கார்!"

– சிற்பி சோமு

**வி**ரியத் திறந்திருந்தது ஜன்னல், ஏதோ பெரிய 'சைஸ்' புத்தகத்தை விரித்து வைத்திருந்தது போல! அதன் கம்பித் தடுப்புகள், வரிசையாக நிற்கிற வரப்புப் பனைமரம் மாதிரி, நேர் நேராக நின்றிருந்தன. அவைகளின் ஊடே, வானத்தைப் பார்த்துக்கொண்டு, கட்டிலில் சம்மணம் போட்டு அமர்ந்திருந்தார், சுந்தா சார்.

நீலவானம், அவருக்கு முன் விரிந்து கிடந்தது. உள்ளிருந்து, ஜன்னல் வழிப் பார்க்கையில் ஏதோ நீலவானத்துக்குச் சட்டம் போட்டு மாட்டி இருந்தது போலத் தோன்றியது. வானத்தைக் 'கேன்வாசாகக்' கொண்டு, இயற்கை எத்தனை சித்திரத்தை எழுதுகிறது! யானைக் கூட்டங்கள், மலைகள், ஓடும் மான் கூட்டம், புல் வெளி என்று பலப்பல பிரம்மைகள். எல்லாம் பஞ்சு மிட்டாய் மாதிரி சடுதியில் கரைந்து கரைந்து வேறு வேறு பிம்பங்களை எடுத்துக் கொண்டிருந்தன.

தேவகி, காப்பித் தம்ளர், வட்டாவைச் சத்தம் எழ ஸ்டூல் மேல் வைத்தாள். அந்தச் சப்தமும் சுந்தாவுக்கு உறைக்கவில்லை. தேவகி அவரிடம், 'காப்பி சாப்பிடுங்கோ' என்று சற்று உரக்கக் கேட்கும்படி சொன்னாள்.

லேசாகத் திரும்பி, மனைவியைப் பார்த்தார் சுந்தா. காப்பியைப் பார்த்தார். ஒரு நிமிஷம், காப்பியையே உற்றுப் பார்த்தபடி இருந்தார். காப்பி என்கிற வஸ்துவையே இதுகாறும் பார்த்து இராத மாதிரி, அவர் பார்த்தார். பிறகு வானத்தைப் பார்க்கத் தொடங்கினார்.

"எடுத்துக்குங்கோ.. ஆறிடப் போறது" என்றாள் தேவகி.

மோகனாவும், சேகமேரியும் "வரலாமா?" என்றபடி உள்ளே வந்தார்கள்.

"சாருக்கு எப்படி இருக்கு மாமி" என்றாள் மோகனா.

"பாருங்களேன். அப்படியேதான் இருக்கு. இடிச்சபுளி மாதிரி. அப்படியே ஆகாயத்தை வெறிச்சுண்டு உக்காந்திருக்கார். பிரும்மஹத்தி பிடிச்சாப்பிலே.."

மோகனாவும், மேரியும் சற்று அருகில் வந்து, பாதுகாப்பான தூரத்தில் நின்றபடி சுந்தாவை வேடிக்கை பார்த்தார்கள்; உயிரியல் பூங்காவில் காண்டாமிருகத்தைப் பார்க்கிறது போல.

"என்ன சாப்பிடறார் மாமி?"

"காலைலே ரெண்டு இட்லி. சமயங்கள்லே அதுவும் வேணாம்னுடுவார். மத்தியானமா, குளிச்சதும், குழந்தை சாப்பிடறா மாதிரி, 'தம் மூண்டு' சோறு. சாயங்காலம் ஆனா, ரெண்டு தோசை. அவ்வளோதான்."

"டாக்டர் என்ன சொல்றார்?"

"மனசுக்குள்ளே பெரிய அதிர்ச்சி ஏற்பட்டிருக்கு. ஜாக்கிரதையா சுவரட்சணை பண்ணால், நாளடைவில் சரியா போயிடும்னு சொன்னார்."

"ஜாக்கிரதையாப் பார்த்துக்குங்கோ மாமி. பாவம். எப்படி இருந்தார். சிங்கம் மாதிரின்னா இருந்தார். இப்படி ஆயிட்டாரே..." என்று வந்தே இராத கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் மோகனா.

தேவகி, உண்மையில் அழுதாள்.

"காலம் போன காலத்துல, பெத்த பொண்ணே அவருக்கு வினையாயிட்டா... என்ன பண்ண, எல்லாம் என் விதி. வேற என்ன?"

சற்று தூரத்தில், ஏதோ புத்தகம் வைத்துக் கொண்டு படிப்பது போலப் பாவனையில் இருந்தாள் ஜனனி. சுற்றுச் சூழலில் என்ன நடக்கிறது என்றே தெரியாமல், அல்லது தெரிந்து கொள்ள விரும்பாமல், வானத்து வேடிக்கைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார், சுந்தா. திடுமெனச் சிரித்தார்.

"மாமா சிரிக்கிறார்" என்று சொன்னாள் மேரி. சிலுவை இட்டுக் கொண்டு, "கவலைப் படாதீங்க... எல்லாம் கர்த்தர் விருப்பம். சரியா போயிடும். வேளாங்கண்ணி மாதாவுக்கு வேண்டிக்கிடுங்க, தேவகி."

"பேஷா. வேண்டிக்கறேன். எந்த தெய்வமாவது கண் திறந்தா தேவலை."

வாசலில் நிழல் ஆடியது.

"நான்தான்" என்றபடி ஒரு பழக் கூடையோடு உள்ளே வந்தான், ஆல்பர்ட்.

திடுக்கிட்டு எழுந்த ஜனனி, "வா ஆல்பர்ட்" என்றாள். தேவகி, எதுவும் பேசத் தோன்றாமல் திகைத்துப் போய் நின்றாள். ஆல்பர்ட், சுந்தாவின்



## அருள்வாக்கு

பிரஸங்கம் பண்ணின நாளில், "ஊர்க் குழந்தையை ஊட்டி வளர்த்தால் தன் குழந்தை தானே வளரும்" என்று அடிக்கடி quote பண்ணித்தான் இருக்கிறேன். அதாவது உன் குழந்தையைப் பட்டினி போட்டுவிட்டாவது போய் ஊர்க் குழந்தையை ஸம்ரக்ஷணை பண்ணு என்று சொல்லித்தான் வந்திருக்கிறேன். அப்படிப் பழமொழி இருப்பதும் வாஸ்தவம். ஸத்யமாக இல்லாத ஒன்று பழமொழியாக ஆகிறதில்லை. ஆனால், இந்தப் பழமொழி ரொம்ப உசந்த நிலையில், தொண்டு மனப்பான்மையில் அப்படியே ஊறிப் போனவர்களைக் குறித்து ஏற்பட்டிருக்க வேண்டும். அவர்கள் மனஸறிந்து தன் குழந்தையைக் கதற விட்டுவிட்டு ஊர்க் குழந்தையைச் சீராட்டினார்களென்று அர்த்தமில்லை. பரோபகாரத்தில் அவர்களுக்குள்ள தீவிர உணர்ச்சி வேகம் அவர்களை இப்படி அடித்துக் கொண்டு போயிருக்கிறது. பக்தி வெறியில் ஒவ்வொரு நாயன்மார் லோக தர்மங்களுக்கு விரோதமாகக் கூடப் பண்ணவில்லையா? அப்படி இதுவும் ஒரு பரவச நிலையில் பண்ணுவது. அப்படி இவர்கள் தங்களுக்கு அதீதமான ஒரு சக்தியின் கீழ் ஊரிலே உள்ள அநாதைக் குழந்தைகளின் நலனுக்கே தங்களை அர்ப்பணம் பண்ணிக்கொண்டபோது, ஈச்வரப் பிரஸாதமாக வீட்டிலே இவர்களுடைய குழந்தைகள் கவனிப்பு இல்லாமல் (அல்லது ஈச்வரனின் கவனிப்பிலேயே) நன்றாக வளர்ந்திருக்கும். அதனால் இது ஸாதாரணமாக லோகத்திலிருக்கப் பட்டவர்களுக்கு 'எக்ஸாம்பிள்' ஆகாது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

அருகில் போய் நின்று அவரையே பார்த்துக்கொண்டு நின்றான். பிறகு, தேவகியின் பக்கமாகத் திரும்பினான்.

"கவலைப்படாதீங்க. சீக்கிரம் சார் குண மாயிடுவார்" என்றான். ஜனனியின் பக்கம் திரும்பினான்.

"நல்லா இருக்கியா, ஜனனி?"

"உம்" என்றாள் ஜனனி, அம்மாவைப் பார்த்தபடி.

"சாயங்காலமா, ரெஸ்டாரண்டுக்கு வா. பேசணும்."

"சரி."

தேவகியிடம், "வர்றேன், வணக்கம்" என்றபடி, வெளியில் வந்து ஷூவை அணிந்து கொண்டான். புறப்பட்டான்.

திகைப்பு மாறாமல் இருந்தாள். தேவகி ஆல்பர்ட் வந்தது தப்பு என்று நினைக்க வில்லை. மாறாக, மோகனா இருக்கும் போது வந்ததுதான் தப்பு என்று தோன்றியது அவ ளுக்கு.

மேரியை அவள் வீட்டில் விட்டுப் புறப் பட்டாள் மோகனா. லட்சுமியிடம் அவளுக் குச் சொல்ல நிறைய இருந்தது. லட்சுமி, கிரைண்டரில் இட்லிக்கு அரைத்துக் கொண் டிருந்தாள்.

"தெரியுமோ சேதி?"

"என்ன, என்ன?"

கிரைண்டரை நிறுத்தி விட்டாள், லட்சுமி.

"சுந்தா. அந்தப் பக்கம் பாயைப் பிராண்டுது. இன்னும், சட்டையைக் கிழிக்கக்கலை."

"அப்படியா, இருக்குது. என்ன அதி காரம்மா அது பண்ணியது. இப்போ ஓஞ்சி போய்க் கிடக்கு."

"இந்தப் பக்கம், மாமியாரும் மருமகளும் கொஞ்சறாங்க."

"யாரு, அந்த கிறிஸ்துவப் பையனா?"

"அவன்தான். வேற யாராம்? அந்தப் பையன், வண்டி வண்டியா, பை பையா பழம் கொண்டாந்து 'சாப்பிடுங்கோ மாமின்னு' வேண்டிக்கிறதும், இந்தக் கிழம், மருமகனுக்கு 'ஹார்லிக்ஸ்' போட்டுக் கொடுக்கிறதும், அந்தக் குட்டி ஜனனி, கிடந்து அவனை ஈஷிக்கிறதும், எல்லார் முன்னிலையிலும் கொஞ்சறதும், பார்க்க சகிக்கலை அம்மா."

"இப்படியும் உலகத்துல உண்டுமா? அந்த மனுஷன், பீஷ்மன்னா? என்ன மாதிரி கெத் தும், அந்தஸ்துமா இருந்தார். அவருக்கு வந்த பவிஷைப் பாரேன். அவர் நல்லபடியாக இருந்தா, அந்தப் பையனைப் படியேற விடு வாரா? இந்த தேவகி, பழமும் பாதாமுமா தின்னுவாளா? அந்த ஜனனிக் குட்டி, இப் படிக் கொழுத்துப் போய்த் திரிவாளா? எல் லாம் கலி. வேற என்ன? இங்க ஏற்கெனவே, ஊர் ஆம்பிளைகளை வளைச்சுப் போட பிந் துன்னு ஒன்னு கட்டை அவிழ்த்துக்கிட்டு திரி யுது. இப்போ, ஜனனி, புறப்பட்டிருக்காளாக் கும். இந்தக் காலனி, என்னமா இருந்துச்சி. இப்போல்லாம் கெட்டே போச்சு."

கிரைண்டர் வெகு நேரத்துக்குப் பிறகே, இயங்கியது.

அர்த்தநாரி. அன்று பெரிய அளவு கோத் ரெஜ் அலமாரி வாங்கி இருந்தான். நாலு ஆட் கள். அப்போதுதான், அதை வீட்டில் இறக்கி வைத்து விட்டுச் சென்றார்கள். வீடு, பொருட் களால் அடைக்கப்பட்டுக் கொண்டு இருந்தது.

"எப்படி இருக்கு அலமாரி, வள்ளி? அபிப்பிராயமே சொல்ல மாட்டேன்றயே."

வள்ளி, முகம் கழுவித் துடைத்துக் கொண் டிருந்தாள்.

"என்ன சொல்லணும்?"

'கொழுப்புச் சத்து அதிகம் உண்பதால் இதய நோய் வரும்.' 'கொலஸ்ட்ரால் அற்ற எண்ணெய் வகைகளைப் பயன்படுத்தினால் இந்த அபாயம் குறையும்' என்றெல்லாம் பரவலாகப் பேசப்பட, பாரம்பரிய எண்ணெய் வகைகளுக்கு 'டாடா' சொல்லிக் கொண்டிருக்கிறோம் நாம்.

ஒரு விஷயத்தில் தெளிவாய் இருந்தால் பயத்துக்கு அவசியமில்லை. எதுவுமே அளவு மிஞ்சிப் போகும்போதுதான் அபாயம்! எனவே 'எண்ணெய்யில் சமைத்த பண்டங்கள் அத் தனையும் ஒதுக்கப்பட வேண்டியவை' என்று நினைப்பது சரியல்ல.

மேலும், சிகரெட், மது, அதீதமான டென்ஷன் போன்றவற்றால் பாதிக்கப்படும் அளவுக்கு, எண்ணெய்ப் பண்டங்களால் நமது இதயம் பாதிக்கப்படுவதில்லை என்பது நவீன கணிப்பு. எனவே, மேற்படி மூன்று விஷயங் களில்தான் அதிக கட்டுப்பாடும் கவனமும் தேவை என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள்.

கூடவே கொழுப்புச் சத்தை அளவுக்கு மிகாமல் உட்கொள்வதும் அவசியம். சுறு சுறுப்பாய் உடல்ரீதியாக உழைப்பவர்கள், தங்கள் உழைப்புக்குத் தேவையான சக்தியில் முப்பத்தைந்து சதவிகிதத்தை கொழுப்புச் சத்திலிருந்து பெறுகிற வகையில் திட்டமிட்டு உண்ணலாம். இதர 'அசையா' பணியாளர்கள் சுமார் முப்பது சதவிகித உழைப்பு சக்தியை மட்டுமே கொழுப்புச் சத்திலிருந்து பெறுகிற வகையில் உணவைத் திட்டமிட்டுக் கொள்ள வேண்டும்.

சமையல் எண்ணெய்யில் பொதுவாகக் காணப்படும் கொழுப்பு அமிலங்களுள் மூன்று



# எண்ணெய் வாங்கு முன் எண்ணிப் பாருங்கள்!

வகைகள் உண்டு :

Saturated fatty acids (SAFA)
Mono unsaturated fatty acids (MUFA)
Poly unsaturated fatty acids (PUFA)

எல்லா சமையல் எண்ணெய்களிலும் இவை மூன்றும் வெவ்வேறு விகிதாசாரங்களில் அடங்கியிருக்கும்.

உடலில் தேங்கும் கூடுதல் கொழுப்புச் சத்து ரத்தக் குழாய்களில் படிந்து அடைப்பு ஏற்படுத்தும் என்றும் இதுவே முற்றிய நிலையில் இதயத் தாக்குதலுக்கு வழிவகுக்கும் என்றும் தெரிந்து வைத்திருக்கிறோம். மேற்படி மூன்று அமிலங்களுள் PUFA மட்டும் கொஞ்சம் சமர்த்து அமிலம். PUFA அதிகமுள்ள எண்ணெய்யைப் பயன்படுத்துவதால் ரத்த நாளங்களில் படியக்கூடிய கொழுப்பின் அளவு குறைவதுடன் அந்தக் குழாய்கள் 'கழுவி'ச் சுத்தமாக்கவும் படுகின்றன. இந்தக் கண்டு பிடிப்பை எண்ணி ஆராய்ச்சியாளர்கள் மகிழ்ந்து கொண்டிருக்கும்போதே ஒரு கெட்ட செய்தியும் தெரியவந்துள்ளது. அதிக அளவில் PUFA உடலுக்குள் போனால் கான்சர் வரலாம் என்பதே அந்தச் செய்தி!

இந்த அதிர்ச்சி ரிப்போர்ட்டைத் தொடர்ந்து உலக சுகாதார நிறுவனம் (WHO), சரியான SAFA : MUFA : PUFA விகிதாசாரம் ஒன்றைப் பரிந்துரை செய்திருக்கிறது. 40:28:32 என்பதே அந்த விகிதாசாரம்.

இப்போது இந்த விகிதாசாரத்தில் துல்லியமாய் அமையக்கூடிய சமையல் எண்ணெய்யைத் தயாரிக்க உலகம் சிண்டைப் பிய்த்துக் கொண்டு ஆராய்ச்சியில் இறங்கியிருக்கிறது!

எண்ணெய்யை நீண்ட நேரம் கொதிக்க விடும்போது வெளிப்படும் சில ரசாயனக் கலவைகள் கான்சருக்குப் பேருதவி! எனவே பொறித்த பண்டங்களைத் தயாரிக்கும்போது அடிக்கடி எண்ணெய்யை மாற்றுவது அவசியம். எண்ணெய் நுரைப்பதைத் தடுக்கும் ஒரு anti foaming agentஐ உற்பத்தி சமயத்தில் சேர்த்து விட்டால், கான்சர் விளைவிக்கும் ரசாயனங்கள் வெளிப்படுவது தடுக்கப்படுகிறது. குறைந்த எண்ணெய்யைக் கொண்டு அதிகம் சமைக்கவும் முடிகிறது.

அடுத்த முறை எண்ணெய் வாங்கும்போது இத்தனையும் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்! விலையை மட்டும் ஞாபகம் வைத்துக் கொள்கிறோம் என்கிறீர்களா? அதுவும் சரிதான்!

---

"வீட்டை, எவ்வளவு சௌகர்யமா ஆக்கிக் கிட்டிருக்கேன். உனக்குத்தானே சந்தோஷம் வரணும்."

"எனக்குச் சந்தோஷம் இல்லை."

"ஏன்?"

"வீடுங்கறது. சாமான்களின் அடைசல் இல்லை. சாமான்கள், சந்தோஷம் தருமா? தரும்னா, ஸ்டோர் வச்சிருக்கிறவன் சந்தோஷமா இருக்கணுமே. அதிக சந்தோஷமா? இப்படியே, கண்டதையும் வாங்கி அடைச்சுக் கிட்டு இருந்தா, நாம் எங்கே வாழறது?"

"அவமாரி தேவைதானே!"

"ஒன்று போதும். நம்ம வீட்டுல, இது மூணாவது."

"ஒரு கான்டிராக்டர் 'ஓசி'யிலேயே வாங்கிக் கொடுத்தான்."

அவன் அவள் பக்கம் திரும்பிச் சொன்னாள்.

"இது சரி இல்லைங்க. எனக்குப் பிடிக்கலை. இதைப் பார்க்கும்போதெல்லாம், அந்தக் கான்டிராக்டர் என்னைப் பார்த்துச் சிரிக்கிற மாதிரி, என்னைத் தொடற மாதிரி இருக்கு. எனக்கு அருவருப்பா இருக்கு..."

அர்த்தநாரிக்கு அவள் பேச்சு விளங்கவில்லை. வேறு ஏதாவது பேச வேண்டும். ஆகவே சொன்னான்.

"அந்த பிந்துவோட நெருங்கிப் பழகிறியாமே."

"அதுல என்ன தப்பு?"

"அவ ஒரு மாதிரின்னு எல்லோரும் சொல்றாங்க."

"என்னையும் உங்களை விடவும் அவ நல்லவ."

அர்த்தநாரி. அதிர்ச்சியடைந்தான்.

(தொடரும்)

## வி.ஐ.பி.குடும்பங்கள்: ராஜ் டீ.வி. ராஜேந்திரன்

ராஜ் டீ.வி. நிகழ்ச்சிகளைப் பார்த்து நறைநிறைகளை மறைக்காமல் சொல்லும் ஒருவரை நமக்கு அறிமுகப்படுத்தினார், ராஜேந்திரன். முக்கியமாகக் குறைகளைச் சொல்லுவதில் எக்ஸ்பர்ட்டாம். இப்படித்தான் தமது மூத்த மகள் விசாலாட்சியை நமக்கு அறிமுகப்படுத்தினார். விசாலாட்சியும், அவரது தங்கை ரத்னமாலாவும் பத்தாம் வகுப்பு படிக்கிறார்கள். மகன் நாச்சியப்பன் படிப்பது நான்காம் வகுப்பு- லதா ரஜினியின் 'ஆஷ்ரம்' பள்ளியில்.

"தம்பிகளுக்குப் பெண் பார்ப்பது, தங்கைகள் கல்யாணம் இதுபோன்ற குடும்ப விஷயங்களிலெல்லாம் மனைவியின் ஆலோசனைகளை நிச்சயம் கேட்டுப்பேன். ஆனால் என் தொழில், வியாபாரம் பற்றியெல்லாம் அவளிடம் யோசனை கேட்டதுமில்லே; அவளாகச் சொன்னதுமில்லே" என்கிறார்.

இருபது வருடங்களுக்கு முன் இவர்களின் திருமணம் நடந்தது. அதற்கு முன்பே (சற்றே தூரத்து) உறவுக்காரர்கள் தான்.

"இவரது சிரித்துப் பேசும் குணம் எனக்குப் பிடிக்கும்" எனும் அமுதா ராஜேந்திரன். தங்கள் குழந்தைகளைப் பற்றி "பெரியவளுக்கு வீணையில் ஈடுபாடு. ரொம்ப கட் அண்ட் ரைட் குணம். இரண்டாமவ பரதம் கத்துக்கிறா. சாது. பையன் பிடிவாதக்காரன். விளையாட்டுதான் எப்பவும்" என்று தந்தி மொழியில் விமர்சிக்கிறார்.

"ஏன் எப்பவுமே டென்ஷனாகவே இருக்கீங்க? நடுநடுவிலே ரெஸ்ட் எடுத்துக்குங்கனேன்னு இவ அடிக்கடி சொல்வதுண்டு. இந்த லைனிலே இதெல்லாம் முடிகிற காரியமா?" என்று சிரிக்கிறார் ராஜேந்திரன்.

தமது பிசினெஸைப் பொறுத்தவரை 'குடும்பத்தினரின் ஒத்துழைப்பு' என்று இவர் குறிப்பிடுவது தமது தம்பிகளைத்தான். "என் தம்பிகளான ராஜரத்தினம், ரவிச்சந்திரன், ரகுநாதன் ஆகியோரைக் கலந்து ஆலோசிக்காமல் எந்தவொரு பெரிய பிசினெஸ் முடிவையும் நான் எடுத்ததில்லே" என்கிறார்.

• சகோதரர்களோடு...



"குறைகளைச் சொல்வதில் எக்ஸ்பர்ட் என் மகள்!"

"இப்போ எங்க போட்டியாளர்களுக்கு பண பலம் இருக்கு. பதவி பலம்கூட இருக்கு. இருந்தாலும் நான் தைரியத்தோடு இந்தத் துறையிலே தொடர்ந்துக்கிட்டிருக்கேன்னா அதற்குக் காரணம், உங்களைப் போன்ற பத்திரிகைகள் தரும் ஆதரவு, கேபிள் டீ.விக்காரர்கள் மற்றும் ரசிகர்கள்... இவர்களோடு என் குடும்பத்தின் முழு ஒத்துழைப்பும்தான்."

வீடியோ லைப்ரரி வைத்திருந்வர் ராஜேந்திரன். மளமளவென்று முன்னேற்றம். சிலருக்கு மட்டுமே



• குடும்பத்தோடு...

கிடைக்கக்கூடிய உயர் நிலையில் இப்போது.

83ல் வீடியோ லைப்ரரி துவக்கம் என்றாலும் அதற்கு முன்பே இலங்கையில் வேறு வியாபாரங்களில் காலூன்றியவர்தான். கொழும்புவில் துணி வியாபாரம் மற்றும் சைக்கிள் ஏற்றுமதி ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தார் இவரது அப்பா.

"அப்பா ரொம்பக் கண்டிப்பு. நல்லா படிக்கச் சொல்லுவாரு. இருந்தாலும் மூத்த பிள்ளைன்றதாலே தன் துவுணி வியாபாரத்தை நான் பொறுப்பேத்துக்கணும்னு நினைச்சாரு. இதனாலே எஸ்.எஸ்.எல்.சி.யோட என் படிப்பு நின்னிடுச்சு" என்கிறார் ராஜேந்திரன்.

நான்கு சகோதரர்கள், மூன்று சகோதரிகள் என்று அமைந்த இந்தப் பெரிய குடும்பத்தில் மூத்தவர் ராஜேந்திரன்.

"அப்போ நாங்க இலங்கையில இருந்தோம். வியாபாரம் சம்பந்தமா அப்பப்போ இந்தியாவுக்கு வந்து போயிட்டிருப்பேன். 83 என்னால் மறக்கவே முடியாத வருடமாயிடுச்சு. அந்த வருடத் தொடக்கத்திலேதான் இந்தியாவிலேயே செட்டிலாயிடலாமான்னு நினைச்சோம். அந்த ஜூன் பதினாறாம் தேதிதான் என் மூத்த மகன் விபத்திலே இறந்தான். அந்த சோகம் பத்தாதுன்னு அவன் இறந்த ஒரே வாரத்தில் எங்கள் பகுதியிலிருந்த தமிழர்களுக்கெல்லாம் பெரும் சோதனை. ஏதோ நாங்களெல்லாம்தான் இலங்கையைத் துண்டாடி, தனி ஈழம் வேணும்னு கேட்டதுபோல் எங்க அத்தனை பேர் வீடுகளிலும் நுழைஞ்சு துவம்சம் செய்தாங்க. பல பொருள்களைக் கொள்ளை அடிச்சாங்க. எங்க வண்டிகளைக் கொளுத்தினாங்க."

"வழக்கமா எல்லா வீடுகளிலும் நடக்கக் கூடிய சின்ன உரசல்களை விடுங்க. மத்தபடி என் மாமியாரும் நானும் ரொம்பப் பாசமாப் பழகினோம்!" என்கிறார் அமுதா. "சமையல் செய்வது நாங்கதான்னாலும் எதைச் சமைப்பது எப்படின்றதெல்லாம் அவங்க தீர்மானம்தான்

"அதுமட்டுமில்லே. மளிகை, துணிமணி, மரபுகளை மீறாதிருப்பது எல்லாமே அம்மா ராஜ்ஜியம்தான். என் பிஸினெஸிலே கூட நிறைய அட்வைஸ் செய்வாங்க" என்று அம்மாவை நினைவு கூர்ந்து கூறினார் ராஜேந்திரன்.

அன்று அவரது அம்மாவின் இரண்டாவது நினைவுதினம்.

- அருண் சரண்யா
படங்கள் : யோகா

# அம்பலமானது 'ஆனந்த' ரகசியம்!

"தாம்பரத்துக்குப் பக்கத்துல பச்சை மலைன்னு ஒன்னு இருக்கு தெரியுமா?" என்று ஆரம்பித்த தண்டபாணியைக் கோபித்துக் கொண்டேன். "போன வாரம் முழுக்க கொட்ற மழைல உன்னைத் தேடி கோடம்பாக்கம் முழுக்க அலைஞ்சேன். செய்தி குடுக்கணுங்கற பொறுப்பில்லாம எங்க போய்த் தொலைஞ்சே?"

"மன்னிச்சிரு கிஷ்டா. பெண்டாட்டியோட கோச்சிக்கிட்டு ஒரு வாரம் அம்மா வீட்டுக்குப் போயிட்டேன். நேத்திக்குத்தான் திரும்பினேன். வர்ற வழியிலேயே உனக்கு செய்தி சேகரிக்க ஆரம்பிச்சுட்டேன் தெரியுமா?"

"சொல்லு!" என்று ஆர்வமானேன்.

"இந்த டி.பி. ஆஸ்பத்திரி பின்னால ஒரு மலை இருக்கே, அந்த மலையில இப்ப நிறைய பிளாட் போட்டு, ஃப்ளாட் கட்டிக் குடித்தனம் வர ஆரம்பிச்சிருக்காங்க."

"உன்கிட்ட நான் எதிர்பார்க்கறது, சினிமா செய்திகள்தான் தண்டபாணி."

"முழுக்கப் பேசவிடு. அந்த மலை உச்சில ஒரு வீடு வாங்கிட்டு, புதுசா குடி வந்திருக்கார் இளந்தேவன்."

"யாரு?"

"அதாம்பா! கல்கி படத்துல பாட்டு எழுதினாரே, கவிஞர்! அவரு."

"சரி. அதுக்கென்ன?"

"சென்னையை விட்டு விலகி இத்தனை உசரத்துல வீடு கட்டிட்டு வந்து இருக்காரே, எப்படி இருக்காருன்னு பார்த்துட்டு வரப் போனேன்."

"சரி."

"நான் போன நேரம், இருட்டு. சரியான மழை. கரெண்ட் வேற இல்லை. மலைப் பாதையெல்லாம் கல்லு பெயர்ந்து, கரணம் தப்பினா கோவிந்தா போட வேண்டியதுதான். கஷ்டப்பட்டு ஏறி, போய்ப் பார்த்தா, ஒரு பத்துப் பதினஞ்சு பேர் அவர் வீட்டுல உட்கார்ந்துட்டு ஏதோ மீட்டிங் மாதிரி பேசிட்டிருந்தாங்க."

"கவிஞரைப் பார்க்க வந்திருப்பாங்களாயிருக்கும்."

"விஷயம் என்னன்னா, அங்க ஒரு விழா நடந்துட்டிருந்தது. ரகசியமா. சார்லிக்குப் பட்டமளிப்பு விழா!"

"அதென்ன?"

"கேளு. எந்தப் பத்திரிகையிலேயும் இந்த நியூஸ் படிச்சிருக்க மாட்டே. சார்லியோட திரையுலக சேவையைப் பாராட்டி 'தென்னாட்டு சாப்ளின்'னு பட்டம் குடுத்தாரு இளந்தேவன்."

"நிஜமாவா?"

"பின்னே? மலைக்கு வந்த சூட்டோட இளந்தேவன் இலக்கிய இயக்கம்னு ஒன்னு ஆரம்பிச்சி, இதுமாதிரி கலைச்சேவை பண்றவங்களைப் பாராட்ட திட்டம் போட்டிருக்கார், கவிஞர்."

"அது சரி. இலக்கியத்துக்கும் சார்லிக்கும் என்ன சம்பந்தம்?"

"ஆரம்ப காலத்துல கவிஞர் ஞானக்கூத்தனோட கூடவெல்லாம் தொடர்பு வெச்சிருந்தாராம். கவிதையெல்லாம் எழுதியிருக்காப்பல."

"பரவாயில்லையே?"

"அவர் பேசினதுல ஒரு விஷயம் ரொம்ப டச்சிங்கா இருந்தது கிஷ்டா. 'நானூறு படத்துக்கு மேல நடிச்சி முடிச்சிட்டேன்; ஒரே ஒரு படம் கூட என் போர்ஷன் இல்லாம போனா எடுபடாம போயிருக்கும்னு சொல்லும்படி அமையலை. அப்படியொரு படத்துக்காகக் காத்திருக்கேன்' அப்படீன்னு ரொம்ப உருக்கமா சொன்னார்."

"அடடா!"

"ரொம்ப உருகிடாதே. ஹாட்டா ஒரு செய்தி சொல்றேன் கேளு. பொத்திப் பொத்தி வெச்சிருந்த ஆனந்தம் படத்தோட கதை லீக் ஆயிடுச்சி தெரியுமா?"

"அடடே! நிசமாவா?"

"ஆமா! நம்ம டச்-அப் பையன் ஒருத்தன் வந்து போன வாரம் காதைக் கடிச்சிட்டுப் போயிட்டான்."

"என்னமோ எம்ஜி-ஆர். - சிவாஜியெல்லாம் வராங்களன்னாங்க?"

"அதெல்லாம் தெரியலை. மணிரத்னத்துக்கு இந்தப் படத்துக்கு இன்ஸ்பிரேஷனா

அமைஞ்சது. ஒரு ஜென் கதையாம். ரெண்டு ஜென் குருமார்கள், விரோதியா எதிரும் புதிருமா மடாலயம் நடத்திட்டு வந்தாங்களாம். இவரைக் கண்டா அவருக்குப் பிடிக்காது. அவரைக் கண்டா இவருக்கு ஆகாது. ஆனா இதெல்லாம் உலகத்துக்காகக் காட்டற ஷோதான். ரகசியமா அவங்க ரெண்டு பேரும் நண்பர்கள். இதை அடிப்படையா வெச்சி, அரசியல்ல எதிரும் புதிருமா இருந்த எம்.ஜி.ஆரும் கருணாநிதியும் தனிவாழ்க்கைல நெருங்கின நண்பர்களா - அப்படி இருக்கறது வெளியுலகத்துக்குத் தெரியாம இருந்திச்சின்னா - எப்படி இருக்கும்ங்கறதைக் கற்பனையில் ஓடவிட்டுக் கதை பண்ணியிருக்காராம்."

"அட, அப்படியா?"

"இன்னொரு விஷயம். டைட்டில் மாறப் போவுதுன்னு ஒரு செய்தி வந்ததில்லை? அது அநேகமா மாறாது."

"கப்ஸா விடறியா? நிஜமாவேவா?"

"நம்பறதும் நம்பாததும் உன்னிஷ்டம். இதுக்கே இப்படி சொல்றே. ரகுமான் சப்தம் போடாம ஒரு இங்கிலீஷ் படத்துக்கு இசையமைச்சிருக்கார்னு சொன்னா நம்பவா போறே?"

"என்னது?"

"நிஜமாத்தான் கிஷ்டா. ஒரு பயலுக்குத் தெரியாது. 'FIRE'னு ஒரு இங்கிலீஷ் படம். ஷபானா ஆஸ்மி நடிச்சி- சமீபத்துல தங்க மயிலோ, கரடியோ அவார்டு கூட வாங்கினாங்களே, அந்தப் படத்துக்கு ரகுமான்தான் மியூசிக். ரிலீஸ் ஆகற வரைக்கும் வெளியில சொல்ல வேணாம்னு வெச்சிருந்திருக்காங்க. எப்படியோ என் காதுக்கு வந்துடிச்சி."

"நீ பெரிய ஆள், தண்டபாணி."

"கேளு. மீரா நாயரோட காம சூத்ராவுக்கே ரகுமான்தான் போட்டிருக்கணும். அது ஏ படமா இருக்கு; வேணாம்னு சொல்லிட்டதா செய்தி வந்ததில்லை?"

"ஆமா?"

"காமசூத்ராவுக்கு எள்ளளவும் சளைச்சதில்லையாம் இந்த FIRE. வர்ற ஜனவரியில ரிலீஸாகும்னு சொல்றாங்க. இன்னொண்ணையும் கேள். குஞ்சுமோன் இருக்காரில்லை? அவர், வேற ஒரு பெரிய தயாரிப்பாளரைப் பத்தி, 'நன்றியே இல்லாத ஆளுப்பா'ன்னு பார்க்கறவங்ககிட்டயெல்லாம் புலம்பிட்டிருக்காரு."

"யாரைப் பத்தி?"

"ஏ.எம். ரத்தினம். குஞ்சுமோனோட ஜென்டில்மேன், காதலன் படங்களோட தெலுங்கு உரிமையெல்லாம் வாங்கி, சம்பாதிச்ச காசுலதான் இந்தியன் எடுத்தார் ரத்னம்."

"சரி."

"ஆனா இந்தியன் படத்து பூஜைலேருந்து சமீபத்துல கொண்டாடின வெள்ளிவிழா வரைக்கும் எதுக்குமே குஞ்சுமோனுக்கு அழைப்பு அனுப்பலையாம். 'எத்தனை செஞ்சி என்ன, இந்த ஃபீல்டுல நிரந்தரமான விஷயம் துரோகம் தான். சக்தி, ரட்சகன் படத்தை முடிச்சிட்டு, என் பையனை வெச்சி ஒரு படம் எடுத்துட்டு, பேசாம ரிடையராயிடலாமான்னு பார்க்கறேன்' அப்படீன்னு ரொம்ப நெருக்கமான தோழர்கள்கிட்ட சொல்லிட்டிருக்காராம் குஞ்சுமோன். வரட்டுமா?"

"அடுத்த வாரம் காணாம போயிடாம வந்து சேரு."

**- கிச்சா**



## உங்கள் சேமிப்புக்குத் தேவை அதிக வட்டி, கூடுதல் பாதுகாப்பு. இவற்றுக்கு உறுதி அளிக்கிறது சக்தி பைனான்ஸ்.

அதிக பட்ச வருமானம். அதே சமயம் உங்கள் பணத்திற்கு மிக அதிக பட்ச பாதுகாப்பும் இருக்க வேண்டும். உங்களது இந்தத் தேவையை நன்கு உணர்ந்தவர்கள் நாங்கள்.

எனவே உங்கள் டெபாசிட்டுக-ளுக்கு அளிக்கப்படும் வட்டி வீதத்தை 17.5% ஆக உயர்த்தி இருக்கிறோம். உங்கள் பணத்-துக்கு அதிக பாதுகாப்பும் உண்டு. எப்போதும் போல.

மிகவும் திருப்தி அடைந்துள்ள 2 லட்சம் டெபாசிட் தாரர்கள் சக்தி பைனான்ஸிடம் முழு நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்.

இவ்வாறு அவர்கள் எங்களிடம் வைத்துள்ள மொத்த டெபாசிட் தொகை ரூ. 200 கோடி. தவிர, சக்தி பைனான்ஸுக்கு பக்க பலமாக இருப்பவை ரூ.1000 கோடி மதிப்புள்ள சக்தி நிறுவனங்கள். உங்களுக்கும் கூட இவை பக்க பலம்தான்.

இந்திய ரிசர்வ் வங்கியின் தகுதிச் சான்றிதழைப் பெற்றுள்ள ஒரு சில வங்கிகளல்லாத நிதி நிறுவனங்களுள் சக்தி பைனான்ஸும் ஒன்று.

இன்றே எங்களிடம் டெபாசிட் செய்யுங்கள். நிம்மதி பெறுங்கள்.

# சக்தி பைனான்ஸ்

# 23.10.96 முதல் திருத்தப்பட்டுள்ள வட்டி விதங்களில் டெபாசிட்டுகளை ஏற்கிறது.

**குமுலேட்டிவ் டெபாசிட்**

| காலம் (மாதங்களில்) | முதிர்வு தொகை (ரூ. 1000த்திற்கு) | ஆண்டு வருவாய் % |
|---|---|---|
| 12 மாதங்கள் + 1 நாள் | 1,161 | 16.06 % |
| 18 மாதங்கள் | 1,269 | 17.93 % |
| 25 மாதங்கள் | 1,407 | 19.54 % |
| 30 மாதங்கள் | 1,525 | 21.00 % |
| 36 மாதங்கள் | 1,684 | 22.80 % |

**ஃபிக்செட் டெபாசிட்**

| காலம் (மாதங்களில்) | வட்டி விதம் |
|---|---|
| 12 மாதங்கள் + 1 நாள் | 15.00 % |
| 18 மாதங்கள் | 16.00 % |
| 25 மாதங்கள் | 16.50 % |
| 30 மாதங்கள் | 17.00 % |
| 36 மாதங்கள் | 17.50 % |

(இந்திய ரிசர்வ் வங்கியின் விதிமுறைப்படி) டெபாசிட்டுகளின் மீது புரோக்கரேஜ் அளிக்கப்படும்.
12 மாதங்கள் + 1 நாள் / 18 மாத டெபாசிட்டுகளுக்கு - டெபாசிட் தொகையில் 1.5% ஊக்கத்தொகை.
25/30/36 மாத டெபாசிட்டுகளுக்கு - டெபாசிட் தொகையில் 2.0% ஊக்கத்தொகை.



## சக்தி ஃபைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம் : 475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர் - 641 018.

**சக்தி பைனான்ஸ். வங்கிகளுக்கு இணையான பாதுகாப்பு.**

மேலும் விபரங்களுக்கு தி ஹிந்து மற்றும் தினமலரில் 23.10.1996 அன்று வெளியான சட்டபூர்வமான விளம்பரத்தைப் பார்க்கவும்.

AKSHAR

30



# இணையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

ஸ்ரீ ராமனின் குண இயல்புகளைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தேன். இதரர் நலனையும் தன்னலனாகவே கருதக் கூடியவன் அவன்.

இங்கேயிருந்து அணை கட்டி இலங்கைக்குப் போக வேண்டும். விபீஷணனைக் கூப்பிட்டுப் பரமாத்மா கேட்கிறான்: "உங்க ஊருக்குப் போகணும்னா, இவ்வளவு பெரிய சமுத்திரம் குறுக்கே இருக்கிறதே.... என்ன பண்ணலாம்?"

உடனே விபீஷணன் சொல்கிறான்: "ஹே ராகவா! சமுத்திர ராஜனிடத்திலே சரணாகதி பண்ணு... அவனே வழி காட்டுவான்..."

தான் சரணாகதி பண்ணினதாலே, பகவானையும் அதே மாதிரி சரணாகதி பண்ணும்படி சொன்னான் விபீஷணன்!

பகவானுக்குக் கொஞ்சம் யோசனை... 'நம்மைப் போய்ச் சரணாகதி பண்ணச் சொல்கிறானே... இவன் பண்ணினதால்தான் நாமும் பண்ணவேண்டும் என்கிறான்...'

ஆனால் பரமனுக்கு விபீஷணனுடைய உள்ளத் தூய்மை புரிந்திருந்தது. சரணாகதி பண்ணினால் அதற்குப் பலன் ஏற்படும் என்பது அவன் (விபீஷணன்) அனுபவத்தில் அறிந்த உண்மை. அதனால் பகவான் அப்படி சரணாகதி பண்ணலாமா? அவ்வாறு அவனைப் பண்ணும்படி சொல்லலாமா? கூடாதா? என்கிற கேள்விகளெல்லாம் அவன் மனத்தில் எழவேயில்லை.... இதை பகவான் அறிந்திருந்தான். விபீஷணின் உள்ளத் தூய்மையை மதித்து அவனும் சரணாகதி பண்ணினான்.

இங்கு ஆசார்யர்கள், விபீஷணன் எவ்வளவு நல்லவன் என்கிறதைக் காட்ட ஒரு கதை சொல்லுவார்கள். வேடிக்கையான கதை.

ரொம்ப பரமைகாந்தியாக ஒருத்தர். பாவம்! லௌகிகமே தெரியாது அவருக்கு! ஆசார அனுஷ்டானங்களைத் தவிர வேறொன்றையும் அறியாதவர். வாசல் திண்ணையை விட்டு எங்கும் போய் அறியார்.

நித்தியம் அந்தத் திண்ணையிலேதான் படுத்து உறங்குவார். ஒரு நாள், அப்படிப் படுத்துத் தூங்கவிருந்த சமயம்... அவருடைய தாத்தாவுக்குத் தாத்தாவுக்குத் தாத்தா காலத்திய வெள்ளிச் செம்பு... அதை. தலைமாட்டிலே வைத்துக் கொண்டு படுத்திருந்தார்.

அங்கேயிருந்து அவ



ருடைய தர்மபத்னி வந்து சேர்ந்தாள். வந்து, "சுவாமி! இப்படி படுத்திண்டிருக்கிரே! நிராதரவா, தலைமாட்டிலே வெள்ளிச் செம்பை வைத்துண்டு படுத்திண்டிருக்கிரே... உள்ளே வைக்கிற, பூட்டி வைக்கிற வஸ்துவே திருட்டுப் போய் விடுகிறதே... இப்படி பந்தோபஸ்து இல்லாமல் செம்பை வைத்தால் திருட்டுப் போய்விடாதா...?" என்றாள்.

"இது திருடு போகாது...!" என்று உறுதியாக பதில் சொன்னார் அவர்.

"அது எப்படிச் சொல்றீங்க?"

"அந்த செம்பைப் பாரேன்..."

"பார்க்கிறேனே...எனக்கு ஒன்றும் தெரியலையே...."

"செம்பை நான் எப்படி வைச்சிருக்கேன் பாரேன்...!"

"கவிழ்த்து வைச்சிருக்கீர். அப்படி வைத்தால் திருட்டுப் போகாதா சுவாமி?"

அதற்கு அவர் சொல்கிறார்: "நிமிர்த்து வைச்சேனானால் அதிலே தீர்த்தம்- ஜலம் இருக்கும். கவிழ்த்து வைச்சால் அதுவே ஒரு சொட்டு ஜலம் இல்லைங்கறது தெளிவாற தோல்வியோ... அதனாலே திருட்டுப் போகாது."

''தீர்த்தம் இல்லைன்னா திருட்டுப் போகாதா சுவாமி?"

"இப்ப இந்த சொம்பைத் தொட

ணும்னா கையலம்பணுமோயில்லையோ.. கையலம்ப இங்க தீர்த்தம் எங்க இருக்கு...?" என்று கேட்டார் அந்த எளியவர்!

இவர் செம்பைத் தொடவேண்டுமென்றால் முதலில் கையலம்பிக் கொண்டுதான் தொடுவார். வருகிற திருடன் கூடவா கையலம்பிக்கொண்ட பிறகே செம்பைத் தொட

வேண்டும் என்று நியமம் பார்க்கப் போகிறான்!... ஆனால் அவர் அப்படியெல்லாம் யோசிக்கவில்லை. ஆசார சீலர்! இந்த உலகத்திலே அத்தனை பேருமே தம்மைப் போல ஆசார சீலர்களாக இருப்பார்கள் என்று அவர் நினைக்கிறார்! அதிலே ஏதாவது தப்பு உண்டோ!

அதே மாதிரிதான், ராமன் சரணாகதி பண்ணலாமா கூடாதா என்கிற விசாரமெல்லாம் விபீஷணனுக்கு ஏற்படவில்லை.

பகவானும் விபீஷணன் சொல்படி சமுத்திர ராஜனிடம் சரணாகதி பண்ணினார். மூன்று நாட்கள், திருப்புல்லாணி என்கிற க்ஷேத்திரத்திலே சரணாகதி பண்ணியும் சமுத்திரராஜன் வழி விடவில்லை. உடனே, "சுமித்ரா நந்தனா! வில்லை எடு! இந்த சமுத்திரத்தின் மீது அஸ்திரப் பிரயோகம் பண்ணுகிறேன்...!" என்று சொல்லி பாணத்தைப் பிரயோகம் பண்ணினான்.



***"நீங்க சொல்றபடி பார்த்தால் கொள்ளை நடந்து பத்து நிமிஷம்தான் ஆகுது. அதற்குள் எப்படி போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தீங்க?"***

***"அவங்க வந்த ஆட்டோவிலேயே விட்டு குடுத்தாங்க, இன்ஸ்பெக்டர்!"***

***– மயிலாடுதுறை ஆர். ஜெயந்தி***

அதன்பிறகு விசேஷமாக ஐந்து நாட்களில் சேது பந்தனம் நடந்து முடிந்தது.

சின்ன குரங்கு, பெரிய குரங்கு, அதைக் காட்டிலும் பெரியது, கிழட்டுக் குரங்கு என்று அத்தனை குரங்குகளும் வந்து சேர்ந்து உதவின. அந்தக் குரங்குகள் செய்த பாக்கியம் தான் என்ன!

அவை அத்தனையும் எகிறிக் குதித்துக் கொண்டு சந்தோஷத்துடன் சேதுவைக் கடந்து போயினவாம். மறுபக்கத்தில் என்ன வாழை இலைபோட்டு விருந்தா பரிமாறப் போகிறார்கள்...? அதெல்லாம் இடையாது; பிராணனை விடுவதற்காகத்தான் போகிறோம் என்று அத்தனை குரங்குகளுக்கும் தெரியும். பகவான் ராமனுக்காகப் பிராணனை விடுவதற்குத்தான் அத்தனை உத்ஸாஹம்!

இலங்கைக்குப் போன சுக்ரீவன் அந்த நாடு எப்படியிருக்கிறது என்று பார்க்க முதலில் கிளம்பினானாம். இதற்குள்ளே, வானரப் படை வந்திருப்பதைக் கேள்விப்பட்டு, ராவணனும் என்னவென்று பார்க்கப் புறப்பட்டானாம்.

ஆகாச மார்க்கமாய் வருகிறான் ராவணன். சுக்ரீவனுக்கும் அவனுக்கும் பெரிய சண்டை உண்டாகிறது. உடனே சுக்ரீவன் அந்த பத்து தலை கிரீடங்களிலிருந்தும் பத்து ரத்தினங்களைப் பறித்துக் கொண்டு விட்டானாம். அவற்றையே அப்படியே எடுத்து வந்து ராமபிரானுடைய திருவடியிலே வைத்து, நடந்ததைச் சொல்லுகிறான்.

இந்த மாதிரி நிலைமையிலே வேறொரு தலைவனாயிருந்தால் என்ன சொல்லியிருப்பான்?

"சபாஷ்! பேஷ்! உன்னைப் போல வீரன் உண்டா? இவ்வளவு பெரிய காரியம் செய்திருக்கியே...!" என்று கொண்டாடியிருப்பான்.

ஆனால் ராமபிரான் சுக்ரீவனை இப்படிக் கொண்டாடவில்லை. சுக்ரீவனைப் பார்த்துக் கண்ணீர் விடுகிறான் பரமாத்மா: "ஹே சுக்ரீவா! என்ன காரியம் பண்ணினாய் அடா நீ...! எனக்குத் தெரியாமல் இந்தக் காரியத்தை நீ பண்ணியிருக்கலாமா...? இது நியாயமா?" என்று வருத்தப்படுகிறான்!

பகவானுடைய இந்த குணத்தைப் பார்க்க வேண்டும் நாம். இதரர் நலனைத் தன் நலனாய்க் காணக் கூடியவன் அவன். அதனால் அவன் சொல்கிறான்: "உன்னை இழந்து, சீதை கிடைப்பதானால் அந்த சீதை எனக்குத் தேவையில்லை!"

எவ்வளவு உயர்ந்த குணம் இது! தன் காரியம் நடந்தால் போதும் என்று நினைக்காமல், எல்லோரும் சௌக்கியமாய் இருக்க வேண்டும்; தம் காரியமும் கைகூட வேண்டும் என்று நினைக்கிற குணம்.

இத்தனை உயர்ந்த குணம் படைத்தவனானதாலேதான் அவனை விச்வ மூர்த்தி: என்பது.

விச்வ யோனி: என்பது நரசிம்ஹனுக்குச் சொல்லப்பட்ட திருநாமம். 'விச்வமயாத்மா'என்பது வாமனாவதாரத்திலே சொல்லப்பட்டது. விச்வ மூர்த்தி: எல்லார் நலத்தையும் தன்னலனாகக் கருதக்கூடியவன், இக்ஷ்வாகு வம்ச திலகனான ராமபிரான் என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

பரமஸ்பஷ்ட: என்றே அவனை அழைப்பதுண்டு. தெளிவாய்த் தெரிகிறவன் என்று அர்த்தம். ராமன்தான் விச்வம்; அவன்தான் பிரபிரும்மம் என்பது நன்கு தெரிகிறது.

தசரதன் அசுவமேத யாகம் முடித்து புத்ரகாமேஷ்டி யாகம் நடத்தப் போகிறான். எல்லா

தேவதைகளும் பாகத்தை வாங்கிக் கொள்வதற்காக வந்திருக்கிறார்கள். எல்லா தேவதைகளும் நிற்கிற இடத்திலே பகவான் கருடாரூடனாக, சங்கு சக்ரதாரியாக ஆச்சர்யமாய்த் தோன்றினான்.

இதை வேதம் எப்படிச் சொல்கிறது என்றால், 'எல்லா தேவதைகளையும் அங்கங்களாக உடைய பரமாத்மா, அவர்களின் இடையிலேயே தோன்றினான்' என்கிறது.

தோன்றியவன் என்ன பேசினான்? "சமஸ்த தேவதைகளும் எம் திருவடியிலே சரணாகதி பண்ணினார்கள். அவர்களை ரக்ஷிப்பதற்காக நான் இந்த பூலோகத்திலே வாசம் பண்ணப் போகிறேன். பதினோராயிரம் வருஷ காலம் பூலோகத்திலே இருக்கப் போகிறேன். நீங்கள் துக்கத்தை விடுங்கள். ராவணனை ஹதம் பண்ணப் போகிறேன்..." என்று அபயம் சொல்லி, தசரதனைத் தந்தையாய் வரித்து ராமனாக வந்து பிறந்தான்.

இந்த விஷயம் ராமாயணத்திலே ஒளிவு மறைவு இன்றி ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருப்பதினாலே, நாராயணன்தான் ராமனாகப் பிறந்தான் என்பது சந்தேகமற்ற உண்மை. இதை விச்வாமித்திரர் மேலும் ஸ்பஷ்டப்படுத்துகிறார். தசரதனிடம் சொல்லும்போது: "புருஷ சுக்த தேவதை உன் பிள்ளை; அதை நான் உணர்ந்திருக்கிறேன். ஆனால் நீ உணரவில்லை" என்று எடுத்துச் சொல்கிறார்.

அதற்குப் பிற்பாடு, விசேஷமாக, பரசுராமரின் கர்வ பங்கத்தின்போது, நாராயணனே ஸ்ரீராமனாக அவதரித்தான் என்பது இன்னும் ஸ்பஷ்டமாகிறது.

பாலகாண்டம் முடிந்து, பரசுராம கர்வ பங்கம் ஆனதுமே ராமாயணம் முடிந்து போய் விடுகிறது! அதற்கு மேலே சொல்லப்பட்டதெல்லாம், பகவான் 'பதினோராயிரம் வருஷம் இருப்பேன்' என்று சொன்னான் அல்லவா... அவனுடைய அந்த வாக்குக்காக நடத்தப்பட்ட நிகழ்ச்சிகளேயொழிய வேறில்லை.

பரசுராம கர்வ பங்கத்திலேயே ராமாயணம் முடிந்து போவது எப்படி...?

தக்ஷ யக்ஞத்தை துவம்சம் பண்ணியவர் பரமசிவன். அந்த ஈச்வரனிடத்திலே அத்யந்த பக்தி கொண்ட ராவணன் என்ன பண்ணினான்? அந்த ஈசுவரன் எழுந்தருளியிருக்கிற போதே அந்த கைலாச பர்வதத்தைத் தூக்கி ஒரு ஆட்டு ஆட்டினான்! ராவணனுடைய பலம் அத்தனை பலம்! அஷ்ட திக்கஜங்களின் தந்தங்களைத் தன் மார்பிலே தாங்கியவன் அவன். குபேரனை ஜெயித்து, அவனுடைய புஷ்பக விமானத்திலே வந்து கொண்டிருக்கிறான்.

வாஹிஷ்பதி என்கிற பட்டணத்துக்கு அதிபதியான கார்த்தவீர்யார்ஜுனன் அந்த



"நட்மா யோசிச்சு நம்ம தலைவர் ஒரு முடிவு டுத்துட்டார்."

"என்ன?"

"நீங்களா வந்து கைது பண்ணப் போறீங்களா, இல்லை நானா வந்து ஜெயிலுக்குள்ள புகுந்துடவான்னு சி.பி.ஐ.கிட்ட கேக்கப் போறாராம்!"

– டி. பசுபதி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

சமயத்திலே நர்மதை நதியிலே ஸ்நானம் செய்து கொண்டிருக்கிறான். தன் எல்லையில் ஒருவன் வருதைப் பார்த்து ஒரு எகிறு எகிறி புஷ்பக விமானத்தில் குதிக்கிறான். குதித்து விட்டுப் பார்த்தால் பத்துத் தலை ராவணன்!

இந்த கார்த்தவீர்யார்ஜுனன் என்ன பண்ணினான்? கட்டை விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் இடையிலே அந்தப் பத்துத் தலைகளையும் அப்படியே ஒரு பிடி பிடித்தான். குழந்தைகள் தும்பியைப் பிடிப்பது போல, பிடித்த வாக்கில் அப்படியே தூக்கிப் போய் தன் ஊரில் சிறைவைத்து விட்டான்! அப்படியும் கொஞ்சம் நாள் கழித்து 'பிழைத்துப் போ!' என்று ராவணனை வெளியே விட்டு விட்டான் கார்த்தவீர்யார்ஜுனன். இல்லாவிட்டால் ராவணன் வெளியே வந்திருக்க முடியுமா?

அஷ்ட திக்கஜங்களை வென்றவன், கைலாச பர்வதத்தை அசைத்தவன் ராவணன் என்றால் அவன் பலத்தை என்ன சொல்வது. அத்தகைய ராவணனையே விரல் நுனியில் பிடித்துப் போனான் கார்த்தவீர்யார்ஜுனன் என்றால் அவன் பலம்தான் எத்தகையதாய் இருக்க வேண்டும்! அந்த கார்த்தவீர்யார்ஜுனனின் இருப்பிடம் என்று தெரியாமல் பரசுராமர் அடித்து நொறுக்கினார். அப்படியானால் அவருடைய பலம் முதல் இருவர் பலத்தைக் காட்டிலும் அதிகமில்லையா...?

அப்படிப்பட்ட பரசுராமரை பன்னிரண்டு வயதேயான பாலகன் ராமன் அடக்கி ஆள்கிறான் என்றால்.... ராவணனை ஜெயித்தவனை, ஜெயித்தவனை, ஜெயித்து நிற்கிறான் என்றால்... அப்போதே- அந்தக் கணத்திலேயே அவதார பலன் கிடைத்து விடுகிறதல்லவா? ராவண வதத்துக்காகத்தான் ராமாவதாரம் என்று யாராவது சொன்னால் அது இந்தக் கட்டத்திலேயே முடிந்து போகிறதல்லவா!

(தொடரும்)

இத்தனை நேரமாக ஆளைக் காணவில்லை. எங்கிருந்து வந்தானோ. கையில் படக் கதைப் புத்தகம். வெளியிலிருந்து ஓட்டமாக வந்த வேகத்திலேயே படிகள் ஏறி உள்ளே நுழைந்து விட்டான். வேகத்தைச் சற்றே குறைத்து நெடுஞ்சாண்கிடையாக முன்னறையில் விழுந்தான். சிமெண்டுத் தரையின் வழுவழுப்பில் உடல் சறுக்கி, முன் நகர்ந்தது. அதே இடத்தில் அப்படியே கவிழ்ந்து கொண்டு புத்தகத்தை விரித்துப் படிக்கலானான்.

"டே மணி, ஏதுடா புஸ்தகம்? புதுசா?"

"பழசுதான். ஹரீஷ்கிட்டப் போயி வாங்கிட்டு வந்தேன்."

"வெளையாட வாடா."

"போடா... நான் இதப் படிக்கணும்."

மணியரசு அண்ணனைப் புத்தகத்திலிருந்து பிரித்தெடுக்க முடியாது. நன்றாகப் படிக்கவும் செய்வான் அவன். பாடமானாலும் கதைகளானாலும். எனக்கு எழுத்துக்கூட்டியே படிக்க வரும். அதனால் ஜேம்ஸ்பாண்ட் 007, டைகர், இரும்புக் கை மாயாவி, ஸ்பைடர்மேன், ஆர்ச்சி என்று படித்த கதைகளை, கையில் புத்தகத்தை வைத்து ஞாபகப்படுத்திக் கொண்டே சொல்வான் அண்ணன். சௌதாமினியும் நானும் கேட்போம்.

மணியரசு அண்ணன் கதை சொல்வது ஜோராக இருக்கும். குச்சிக் கைகளையும் பின் பாகம் பெரிதாக உள்ளதான ரெட்டைத் தலையையும் ஆட்டிக் கொண்டே விவரணையாகச் சொல்வான். சண்டைகளை மோனோ ஆக்டிங்கில் நடித்துக் காட்டுவான்.

நிஜமாக சண்டை போட அவனுக்கு வராது. பயந்தாங்கொள்ளி. என்னிடமே நிறைய வாங்கியிருக்கிறான். தோற்றுவிட்டு வந்தாலும் இங்கே படுத்துக் கொண்டுதான்

# ஊஞ்சல்

ஷாராஜ்

அழுவது.

அப்போது மல்லாந்து படுத்திருப்பான். சுவரை ஒட்டின மாதிரி. பாதங்களைத் தூக்கி சுவரிலும் வைத்துக் கொள்வான். செந்நிறமாக மேல்நோக்கி அறை முழுதும் அவன் கால் சுவடுகள், சுவரின் கீழ்ப்பகுதிகளில்.

அழுதுகொண்டே, "சௌதா... ஜீவா என்னை அடிச்சுட்டான் சௌதா." புகார் சொல்வான். தேம்பிப் புலம்புவான். அவள் அங்கே இல்லாவிட்டாலும் கூட, அவளுடன் பேசுவதாகவே தனிமையில் பேசிக் கொண்டிருப்பான் அவன்.

"அண்ணா... அழாத. சின்ன அண்ணா பையனை அடிச்சறலாம்." சௌதாமினி அங்கிருந்தால், அவன் கண்களைத் துடைத்து ஆறுதல் அளிப்பாள். என்னையாவது அவர்கள் பதிலடி கொடுப்பதாவது?

"ஏய்... என்ன புள்ள சொன்னே?"

"மணி அண்ணா பையா, இங்க பாரு இவன!" ஆறுதலளிக்க வந்தவள் மிரள, மணியரசு அண்ணன் எழுவான். அவனது முதுகுக்குப் பின் ஒளிவாள் சௌதாமினி.

"இருடா... இரு. அம்மாகிட்ட சொல்லித் தர்றேன்." எட்டிப் பார்த்து உதடுகளைப் பிதுக்குவான். அவள் சிரித்தால் வலக் கன்னத்தில் விழுகிற குழிவு அப்போதும் லேசாகத் தென்படும். தாடையில் சுருக்கம் போலவும் ஏற்படும்.

அம்மா என்றால் பிறகு நிற்பேனா அங்கே. அடுத்த நிமிடம் கனரா பேங்க் பக்கம் மூணாம் வகுப்பில் என்னோடு படிக்கிற சங்கரநாராயணனுடன் கோலியாடிக் கொண்டோ, கில்லியடித்துக் கொண்டோ இருப்பேன்.

எங்களை மிரட்டுவது, தேவைப்பட்டால் அடிப்பது யாவும் அம்மாவே. அப்பாவிடம் பயமில்லை. அவருக்கு முன்னாலேயே நாங்கள் குறும்பு செய்தாலும், "சரசா... இவனுகளை வந்து மெரட்டு" என்று அம்மாவைத்தான் கூப்பிடுவார். அம்மாவுக்குக் கோபம் வந்தால் விறகுச் சுள்ளல் முறிந்துவிடும். கரண்டிக் காம்பு அடுப்புக்குப் போகும். இதுவரை சூடு போட்டதில்லை. பழுத்துச் சிவந்து ஆவி அலைகிற கரண்டிக் காம்பே எங்களை பயமுறுத்தப் போதுமாயிருந்தது.

எங்களை என்ன எங்களை? என்னைத்தான். குறும்பு செய்வது நான்தானே? இல்லாவிட்டாலும் கூட கடைசியில் பழியாவது நானே. இந்த மணியரசு அண்ணன் சாதுவாம். நான் முரடனாம்.

அவனைப் பற்றி எனக்கல்லவா தெரியும்? ஊஞ்சலாடலாம் வாடா என்று கூட்டிப் போவான். மரம் ஏற வராது அவனுக்கு. ஆகவே ஊஞ்சல் கட்ட என்னை மரத்தில் ஏற்றி விடுவான். விழுந்து சிராய்த்துக் கொள்வேன்.

புளியங்காய் அடிக்க ஆசை மூட்டுவது அவன். முதலியார் பார்த்துவிட்டு சத்தம் போடுவது என்னை.

"நான் அப்பவே வேண்டாம்னு சொன்னனில்லடா?" என்று தப்பித்துக் கொள்வான் மணியரசு அண்ணன். அவனைச் சொன்னால் யார் நம்புவார்கள்? அவன் சாது; நான் முரடன். இப்படிப்பட்ட காரியங்களை நான்தான் செய்வேன் என்பது எல்லோருடையதுமான நம்பிக்கை.

"செய்யறதயும் செஞ்சுட்டுப் பொய்யா சொல்ற?" காது திருகப்படும்போது பல்லைக் கடித்துக் கொண்டு முறைப்பேன்.

'கண்ணுல சொட்டுத் தண்ணி வருதா பாரு.' 'என்னடா மொறைக்கற? கண்ண நோண்டிருவன் ராஸ்கல்.' 'முணுக்கு முணுக்குன்னு இருந்துட்டே முந்நூறு வீட்டுக்குத் தீ வெச்சுருவான்.'

இவ்வாறு ஏரியாவிலேயே நல்ல பெயர் எனக்கு வாய்த்திருந்தது. அம்மா எதற்கும் அப்பாவைக் குறைசொல்கிறவளாயிற்றே? இதில் மட்டும் மாறவா போகிறது?

"என்னதான் பொம்பளை அடிச்சு மெரட்டுனாலும் கொழந்தைகளுக்கு ஆம்பள பயம் இருந்தாத்தான ஆகும்?"

அப்பா புத்தகக் கோழி. அம்மா அவரைப் பற்றிப் பேசத் துவங்கினால் மனையடி சாஸ்திரத்தையோ, ஜோதிடக் கலையையோ, சித்த மருத்துவத்தையோ எடுத்துக் கொண்டு அதன் பக்கங்களுக்குள்

தமது பார்வையைப் புதைத்துக் கொள்கிற பழக்கம் அப்போதே இருந்தது.

பயப்படுத்துகிற, கண்டிக்கிற செயல்களை மட்டுமல்ல; எங்களுக்கு நேரடியாக அவர் எதையுமே செய்ததில்லை. எனது ஞாபகத்தில் அவர் என்னையோ மணியரசு அண்ணனையோ 'படிங்கடா' என்று சொன்னதாகவோ, 'ஒழுங்காப் பரீட்சை எழுதினீங்களா?' என விசாரித்ததாகவோ பதிவு இல்லை. அவரிடம் அதிகமாகப் பேசவே மாட்டோம்.

சௌதாமினியை மட்டும் வேலை முடிந்து வந்ததுமே தேடுவார். அவளும் அவரது மடியில் 'ஜம்'மென்று அமர்ந்துகொண்டு வாயாடிக் கொண்டிருப்பாள். அப்பா சம்பள நாளில் வாங்கி வருகிற தின்பண்டங்களின் பாக்கெட்டும் முதலில் அவளையே சேரும். அப்புறம்தான் எங்களுக்குப் பங்கு.

படிப்பு, மற்ற விஷயங்கள் யாவிலும் அம்மாவே பொறுப்பை கவனித்துக் கொள்வாள். சம்பாதித்துக் கொடுப்பதோடு அப்பாவின் கடமை முடிந்தது. என்னையும் மணியரசு அண்ணனையும் அவர் ஏன் சௌதாமினியைப் போல நடத்துவதில்லை? என்னதான் அடித்தாலும் அம்மா அம்மாதான்.

அவள் இன்னும் எனக்கு தலை சீவி, பவுடர் போட்டு விடுவாள். வீட்டுப் பாடம் சொல்லித் தருவாள். சௌதாமினி அவள் மடியில் படுத்துக் கொண்டிருக்கையில் நானும் படுத்துக் கொள்ள அனுமதிப்பாள். சௌதாமினி அப்போது தூங்கியிருக்க வேண்டும். இல்லாதிருந்தால் ரகளைதான்.

"அவன எந்திரிக்கச் சொல்லும்மா."

"நான் எதுக்கு புள்ள எந்திரிக்கணும்? எனக்கும் அம்மாதானே?"

"போடா. இது எங்கம்மா."

"நான்தான் பெரியவன். அதனால உனக்கு மொதல்லயே, எனக்கு அம்மா."

அம்மா இடைப்பட்டு இருவரையும் சமரசப்படுத்த முனைவாள். பலிக்காது.

"அப்ப பெரிய அண்ணாப் பையனுக்குத்தான மொத மொதல்ல அம்மா. ஏம்மா?"

"ஆமா."

"அப்படின்னா அவன் வேண்ணா படுத்துக்கட்டும். நீ வேண்டாம் போ."

அம்மா மடியில் படுத்துக் கொள்ள மணியரசு அண்ணன் விரும்ப மாட்டான். அவனைத்தான் சௌதாமினிக்குப் பிடிக்கும். என்னோடு சேரவே மாட்டாள். இந்த மாதிரி அவள் எனக்கெதிராக கறுப்புக் கொடி உயர்த்துகிற வேளைகளில் அவளைக் கிள்ளி வைத்து விட்டு ஓடி விடுவேன்.

இப்போது அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். இனியும் தொட்டில் பழக்கத்தை விடவில்லை. வாய் மட்டும் காது வரைக்கும் நீள்கிறது.

சங்கரநாராயணன் வீட்டுக்குப் போகலாம் என்றால் அவன் பாட்டி ஊருக்குப் போயிருக்கிறான். மற்ற பையன்களும் அவன் இல்லாத போது என்னை விளையாட்டில் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள்.

திண்ணைக்கு வந்தேன். தனியே அமர்ந்து பூவா தலையா போட்டுக் கொண்டிருந்தேன். நானே கேட்டு, நானே காசு கண்டு, நானே என்னை ஜெயித்து, அல்லது என்னிடம் நான் தோற்று...

"ஜீவா, நானும் வர்றன்டா" மணியரசு அண்ணன். கதை முடிந்துவிட்டது போலும்.

"காசுக்கு, சரியா?"

என்னிடம் கையில் வைத்திருந்தது அந்த ஐம்பது பைசா மட்டுமே. அவன் நிறைய வைத்திருப்பான். ஜெயித்தால் பால்கோவா, சோன் பப்டி எதாவது வாங்க ஆகும்.

"சரி. ஒரு தடவைக்கு அஞ்சு பைசா."

"பத்து."

"அஞ்சு."

"பத்துதான்."

"அப்படின்னா நான் வர்ல."

"சரி, அஞ்சு பைசான்னே வெச்சுக்கலாம். உங்கிட்ட எவ்வளவு இருக்கு?"

உள்ளே சென்று அவன் ஸ்கூல் பேக்கின் ஜாமெண்ட்ரி பாக்ஸிலிருந்து சில்லறைகளைப் பொறுக்கிக் கொண்டு வந்தான். ஒரு ரூபாய் முப்பது காசு தேறியிருந்தது. எப்படியும் எனக்கு பால்கோவா உறுதி.

விளையாட்டின் போது அப்பா வந்தார். செருப்பை வாயிற்படிகளில் கழற்றிவிட்டு வீட்டுக்குள் போய் விட்டார்.

முதலில் நான் தோற்றேன். ஐந்து தடவை. அப்புறம் கடன் கழிந்து, ஜெயிக்க ஆரம்பித்தேன். வெற்றி தோல்விகள் மாறி மாறி வந்து ஆசைப்பட்டது போன்றே ஒரு ரூபாய்க்கு ஜெயித்ததும் அவனிடமிருந்த நாணயத்தை வாங்கிக் கொண்டேன்.

"இன்னும் முப்பது காசு இருக்குதுடா."

எனக்குப் பொறுமையில்லை. "நீயே வெச்சுக்க"ச் சொல்லிவிட்டு ஐம்பது காசை வாயில் போட்டேன்.

"பாத்தயா நீ ஜெயிச்சதும் போதும்ங்கறியே."

"பின்ன... உனக்கு விட்டுத் தருவன்னு நெனச்சயா. போடா டபுள் மண்டை."

"டபுள் மண்டைன்னா அடிச்சுருவன்டா."

சற்று முன் படித்து வந்த 007 நினைப்பில் பேசுவானாக இருக்கும். எனக்கு ஒரு ரூபாயை ஜெயித்த களிப்பும் வேறு. திண்ணையில் எழுந்து நின்று ப்ரூஸ்லீ போஸ் கொடுத்து, "வாடா பாக்கலாம். யா... ஊ... ஆ..." என்னும்

# உங்கள் கண்மணிகளின் பொன்னான எதிர்காலம்

## பூத்துக்குலுங்க முதலீடு செய்வீர்!

# பவர்ஃபின்

| முறையான வட்டி வழங்கும் திட்டம் திட்டம் 'அ' (RIPS) | | | |
|---|---|---|---|
| காலம் | குறைந்த அளவு வைப்பு நிதி ரூ. | வழங்கப்படவுள்ள ஆண்டு வட்டிவீதம் | |
| | | மாதத்திற்கு | காலாண்டுக்கு |
| 12 மாதங்கள் & 1 நாள்<br>25 மாதங்கள்<br>36 மாதங்கள்<br>48 மாதங்கள்<br>60 மாதங்கள் | 5,000 | 15% | 15.19% |

| திரள்வட்டி வழங்கும் திட்டம் திட்டம் 'ஆ' (CIPS-I) | | | |
|---|---|---|---|
| காலம் | குறைந்த அளவு வைப்பு நிதி ரூ. | முதிர்வுத் தொகை ரூ. | ஒரு ஆண்டிற்குப் பெறக் கூடிய வருவாய் விகிதம் |
| 12 மாதங்கள் & 1 நாள்<br>25 மாதங்கள்<br>36 மாதங்கள்<br>48 மாதங்கள்<br>60 மாதங்கள் | 3,000 | 3,483/-<br>4,092/-<br>4,692/-<br>5,445/-<br>6,321/- | 16.06%<br>17.47%<br>18.80%<br>20.38%<br>22.14% |

பவர்ஃபின் நிறைவேறாத வாக்குறுதிகளை வழங்குவதில்லை.



வசதிக்கேற்ற பல வைப்பு நிதித் திட்டங்கள்.



இது ஒரு தமிழ்நாடு அரசு நிறுவனமாக இருப்பதால், உங்கள் முதலீட்டிற்கு முழுப் பாதுகாப்பு தருவதுடன் அதிக வருவாயும் தருகிறது.

**வருமான வரிச் சட்டப்பிரிவு 80L-ன் கீழ் வரிச் சலுகை உண்டு.**




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண்.84, டி.டி.கே.சாலை, ஆழ்வார்ப்பேட்டை,

சென்னை 600 018. தொலைபேசி எண் : 499 7689, 4995648.

இந்தியன் எக்ஸ்பிரசில் 23.9.96 அன்று ஏற்கெனவே வெளியான எமது விளம்பரத்தைத் தொடர்ந்து வெளியிடப்படுகிறது.

DIPR/831/D16/96

போது மறந்திருந்த ஐம்பது பைசா நாணயம் வாயிலிருந்து தொண்டைக்குள் இறங்கி விட்டது.

விக்கலுடன் திணறினேன். கண்களில் நீர் முட்டியது.

"என்னடா ஆச்சு?"

"க்ளாஸ்ஸ்..." என்றதை அவனால் புரிய இயலவில்லை. குழப்பமாய்ப் பார்த்தான். குனிந்து இருமி வாசலில் துப்பியும் காசு வர வில்லை. "காசு... காசு..." என்று வார்த்தை மட்டும் சுத்தமாக வந்தது.

"காச முழுங்கிட்டயா. நான் அப்பவே வேண்டாம்னு சொன்னனில்ல?"

தொண்டைக்குள் விரல் விட்டு எடுக்க முயற்சித்தேன். உள்ளே சிக்கியிருக்கும் போல. விரலுக்குத் தட்டுப்படவில்லை. ஓங்கரித்துக் கொண்டு வந்தது.

"அம்மா... ஜீவா காசை முழுங்கிட்டான்."

மணியரசு அண்ணன் கத்தினதும் அப்பா பனியனோடு முதலில் ஓடி வந்தார். பின் னாலேயே அம்மாவும். மணியரசு அண்ணன், அவர்களுக்கு "பூவா தலையா ஆடிட்டிருந் தமா..." எனத் துவங்கி நடந்ததைச் சொல்லி முடிக்கிற வரை குனிந்த எனது நிலையை மாற்றவில்லை. நிமிர்ந்தால் நாணயம் வயிற்றுக் குள் போய் விடுமோ என்ற பயம்.

"இவ்வளவு பெரிய பையனாயாச்சு! காசை வாயில போடக் கூடாதுங்கற அறிவில்லை யாடா?" அம்மா கோபத்தை என் கால்களிலும் முதுகிலும் அடித்துத் தீர்த்தாள். வயிற்றுக்குள் இறங்கும் பயத்தில் நான் அப்போதும் நிமிர வில்லை. சத்தம் கேட்டு பக்கத்து வீட்டுப் பெண்கள், ஆண்கள் சிலரும் வந்து விட்டனர். இந்த களேபரத்தில் சௌதாமினியின் உறக்கம் கலைந்து அழுகை. அண்ணன் போய் இடுப்பில் அவளை எடுத்து வந்து அவளது கனத்துக்குச் சாய்ந்து நின்றான்.

"பையனுக்கு என்ன ஆச்சு? இப்படி நிக்கறான்?"

"டாக்டர் வீட்டுக்கு கூட்டிட்டுப் போங்க."

"இன்னேரம் விஸ்வநாதன் இருப்பாரா?"

முகங்களைக் காணாமலும் குரல்கள் யார் யார் என்று காட்டின. அப்பா "சட்டைய எடு" என்பதும் தெரிந்தது.

சட்டையுடன் திண்ணைக்குக் கீழே வந்து நின்று என்னைக் குனிந்த வசத்திலிருந்து, கவிழ்ந்த நிலையிலேயே கைகளில் ஏந்தி நடந்தார்.

அவசரத்தில் அவர் செருப்பு அணியாததை, அந்தப் பித்தவெடிப்புப் பாதங்களின் விரைவை, அவரது நடையின் அசைவோடு கவனித்தேன். என் மார்பில் இடது கையும், முட்டிக் கால் பக்கம் வலக் கையுமாக இருந்த அவரது கைகளில் ஒரு நடுக்கத்தையும் உணர முடிந்தது.

பின்னால் மணியரசு அண்ணன், இடுப்பில் சௌதாமினியோடு அம்மா, அமுதாக்கா, ராமமூர்த்தி அண்ணன், பாண்டு அங்கிள், ஷப்னா அம்மா...

டாக்டர் விஸ்வநாதன் அவரது வீட்டில் இல்லை. இப்பத்தான் அரைமணி முன்னதாக நர்ஸிங்ஹோம் போனாராம். டாக்டர் மனைவி சொன்னாள்.

"அய்யோ... பையனுக்கு ஏதாவது ஆயிடப் போகுது. மூர்த்தி ஸார்... ஒரு ஆட்டோ புடிச் சிட்டு வாங்களேன். எம் பையனுக்கு..." அப்பா வின் குரலும் கைகளுடன் மேலதிகமாக நடுங் கியது.

"ஒண்ணும் ஆகாதுங்க, பையனை தலை கீழாப் புடிச்சு பொடனில தட்டுனாப் போதும். காசு தொண்டைல சிக்கிட்டிருந்தா வெளிய வந்துடும்." டாக்டர் மனைவி குரல் நெருங்கி வந்தது.

"இல்லீங்க. வேண்டாம். ஏதாவது ஆயிடுச் சுன்னா... நாம டாக்டர்கிட்டயே எடுத்துட்டுப் போலாம்."

"ஏங்க வீணா பதர்றீங்க. உங்க மகனுக்கு ஒண்ணும் ஆகாது. ஆஸ்பத்திரிக்குப் போனா லும் அவங்க இதத்தான் செய்வாங்க."

"இவங்க சொல்றதத்தான் செஞ்சு பாருங்

# சிக்கனம் சரி; கஞ்சத்தனம் ஏன்?

● கடந்த சில வருடங்களாக, பல்லவன் போக்குவரத்துக் கழக நிர்வாகம், தீபாவளி சமயத்தில் அழகான பெட்டியில் திருப்பதி லட்டுக்களை வைத்து முக்கியப் பிரமுகர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் அன்பளிப்பாக வழங்கி வந்தது. இந்த முறை அன்பளிப்பு கொடுக்க 144 போடப்பட்டு விட்டது. காரணம்? கலைஞர் அரசின் சிக்கனம். இது சம்பந்தமாக பணம் அனுமதிக்க வேண்டி கோப்பு கோட்டைக்குச் சென்ற போது 'தேவையில்லை' என்று சொல்லப்பட்டு விட்டதாம். அதே போல் போலீஸ் கமிஷனர் அலுவலகமும் வருடத்திற்கு ஒருமுறை நிருபர்களை வெளியூர்களுக்கு கூட்டிக் கொண்டு போய் 'குளிப்பாட்டி' விட்டு வரும். அதற்கும் உள்துறை அதிகாரிகள் ஆட்சேபணை தெரிவித்துள்ளார்கள்!

● சென்னை அடையாறில், போலீஸுக்கும்



ரவுடி கபிலனுக்கும இடையில் நடந்த துப்பாக்கி மோதலில், கபிலன் இறந்து போனது ஞாபகம் இருக்கும். அந்த துப்பாக்கிச் சண்டையின் போது எதிர்பாராத விதமாக, குறுக்கே வந்த பொதுஜனம் ஒருவரும் குண்டு பாய்ந்து மரணம் அடைய நேரிட்டது. இறந்து போனவர் குடும்பத்துக்கு முதல்வர் நிவாரண நிதியாக இரண்டே முக்கால் லட்சம் ரூபாய் சிபாரிசு செய்து போலீஸ் கமிஷனரிடமிருந்து கோட்டைக்கு கோப்பு சென்றது. ஆனால் முதல்வர் அலுவலகம் 50 ஆயிரம் ரூபாய்தான் அனுமதித்திருக்கிறது. "இறந்து போனவருக்கு கல்யாணமாகாத தங்கைகளும், உடல்நலமில்லாத பெற்றோரும் இருக்கிறார்கள். இதுபோன்ற விஷயங்களில் கலைஞர் அரசு சற்று தாராளமாக இருக்கலாம்!" என்று சொன்னார் கோட்டை அதிகாரி ஒருவர்.

● குரூரமான முறையில் கொலை செய்யப்பட்ட நாவரசுவுக்கு, நுழைவுத் தேர்வின் மூலம் பொறியியல் கல்லூரியில் இடம்கிடைத்தது. ஆனால் தம்முடைய குடும்பத்தில் இதுவரை டாக்டர்கள் யாரும் இல்லாததால் தந்தை பொன்னுசாமி, நாவரசுவை மருத்துவக் கல்லூரியில் சேர்த்தாராம்!

— கௌசல்யா

களேன்!" அம்மாவின் குரல்.

"பையனை தலைகீழாப் புடிங்க சொல்றேன். ஸார்... நீங்க கொஞ்சம் ஹெல்ப் பண்ணுங்க அவருக்கு."

ராமமூர்த்தி அண்ணனும் அப்பாவும் தலைகீழாகப் பிடித்தனர்.

"வாயத் தெறந்துக்கப்பா."

டாக்டர் மனைவி சொல்லவும் வாய் திறந்தேன். பிடரியில் அவள் சில தடவை மெதுவாகவும் பின் வலுவாகவும் தட்டினாள். நாணயம் வெளியே தெறித்து விழுந்தது.

"டாக்டரம்மா. இன்னும் ரெண்டு மூணு தட்டு தட்டுங்க. காக நெறய வந்தாலும் வரும்!" சிரிப்புகளுடன் நிமிர்த்தப்பட்டேன்.

அப்பா தனது சட்டைப் பையில் கை வைத்தபோது, "அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்" என்றாள் டாக்டர் மனைவி. அம்மா சற்று நேரம் அவளுடன், "இவனோட இதே தொல்லையாப் போச்சுங்க. ஏதாவது வம்பு பண்ணிட்டே இருப்பான்" என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

மற்றவர்களுக்கும் என்னைப் பற்றியோ தங்கள் பிள்ளைகள் பற்றியோ புகார்கள் இருந்தன. என்னைக் கண்டித்து அறிவுரைக்கவும் செய்தனர். நல்ல பிள்ளை மாதிரி கேட்டுக் கொண்டேன்.

உப்பு மூட்டையாக சௌதாமினியை சுமந்து வந்து கொண்டிருந்தான் மணியரசு அண்ணன். நான் விழுங்கி, எடுக்கப் பட்டுவிட்ட ஐம்பது பைசா நாணயம் அவனிடம் இருந்தது. ட்ரௌசர் பாக்கெட்டிலிருந்து எடுத்துக் கொடுத்தான். அதில் எச்சில் இல்லாவிட்டாலும் இருபுறங்களையும் சட்டையில் துடைத்து பத்திரப்படுத்திக் கொண்டேன்.

"அப்பா உன்னை எப்படித் தூக்கிட்டு வந்தாரு?" கேட்டுவிட்டுச் சிரித்தான் மணியரசு அண்ணன்.

உடன் வந்து கொண்டிருந்த அமுதாக்காவும் சிரித்தாள். "காத்துலயே நீச்சல் பழக்கி விட்டாருடா உங்கப்பா இவனுக்கு."

எனக்கு சிரிப்பு வரவில்லை. அப்பா அப்படித் தூக்கிக் கொண்டு வரும்போது அவரது கைகளில் இருந்த நடுக்கம்.... டாக்டர் மனைவியிடம் அவர் பேசினது. அப்போது அவர் அதிகமாகவே பதற்றம் கொண்டிருந்தது யாவையும் நினைத்துக் கொண்டிருந்தேன்.

அப்பா இதற்கு முன்பு எப்போதும் இப்படி இருந்தவரல்லர். இப்போது அவர் எனக்கு புதிதாகத் தெரிந்தார். அவரை, அவரது முகத்தை உடனே பார்க்க வேண்டும்.

"அப்பா எங்கடா மணி?"

"அவரு அப்பவே போயிட்டாரே."

எல்லோருக்கும் முன்பாக ஓடிப் போய் தெருமுனை தாண்டிப் பார்த்தேன். திருப்பத்தில் அப்பா விறுவிறுவென நடந்து தனியே போய்க் கொண்டிருந்தார்.

# பார்வைக்கு வந்தவை...

● **ஞானியர் வரலாறு/சுவாமி சிவானந்தா/ தெய்வீக வாழ்க்கைச் சங்கம், சிவானந்தா ஆஸ்ரமம், சுவாமி சிவானந்தா சாலை, ராசிபுரம், சேலம் மாவட்டம்/ரூ.35.**

ஐம்பத்தொரு ஞானிகளின் வாழ்க்கைத் தொகுப்பு. நமக்குத் தெரிந்த சங்கரர், ராமானுஜர் முதல் தெரியாத மன்சூர், விம்க டெப்ரீஸ் போன்ற அயல்நாட்டு ஞானியர் வரை.

● **உறவு காக்கும் வணிகம்/நல்லி குப்புசாமி செட்டியார்/ பிரெயின் பாங்க், 56, இரண்டாவது குறுக்குத் தெரு, சாய்நகர், சின்மயா நகர், சென்னை-111/ ரூ.50.00**

வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளோருக்கு உதவும் நூல். விற்பனை உத்திகள், விற்பனையாளர் - வாடிக்கையாளர் உறவு பற்றி விவரமாகச் சொல்கிற ஆசிரியரின் மொழி நடை வியக்க வைக்கிறது.

● **கம்ப நாடகம்/டாக்டர் தமிழண்ணல்/வானதி பதிப்பகம், சென்னை-17/ ரூ.25.00**

ஏவி.எம். நினைவுச் சொற்பொழிவு அறக்கட்டளை சார்பில் ஆசிரியர் ஆற்றிய கம்பன் உரையின் நூல் வடிவம். கம்பனில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டோருக்கு விருந்து.

● **குரு அஞ்சலி/வா.மு.சேதுராமன்/கவி அரசன் பதிப்பகம், 12.சாயி நகர் இணைப்பு, ஐயப்பா நகர், சென்னை- 111/ ரூ.36.00**

கவிஞர் தம் குரு 'சாது குரு' என்பவரைப் பற்றி எழுதியுள்ள கவிதாஞ்சலி.

● **கேள்விக்கு என்ன பதில்?/ எஸ்.பி.சுப்பிரமணியன்/ திருமகள் நிலையம், சென்னை- 17/ ரூ.29.00.**

மேல் நாடுகளில் புழக்கத்தில் உள்ள சோதிட முறை விளக்கம்.

● **இன்று/விஜயராமன்/குலமாந்தர் காப்புக் கழகம், கல்யாண மண்டபத் தெரு, காமய கவுண்டன்பட்டி/ ரூ.16.00**

அன்றாட நிகழ்ச்சிகளை, ஆன்மிகத்துடன் தொடர்பு படுத்தி, நெறியோடு இயைந்த வாழ்வுக்கு அறைகூவல் விடுக்கிற நூல்.

● **மனித உரிமைகள் என்றால் என்ன?/ கே.எஸ். ராதா கிருஷ்ணன்/புத்தகப்பண்ணை, 11, 5-வது தெரு, சென்னை- 600 018.**

ஜெயலலிதா ஆட்சிக் காலத்தில் மனித உரிமைகள் எப்படியெல்லாம் மீறப்பட்டன என்பதை சுவாரஸ்யமாக எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

● **வாரம் ஒரு தகவல்/தென்கச்சி கோ.சுவாமிநாதன்/ வானதி பதிப்பகம், சென்னை-17/ ரூ.60.00**

இவை வானொலித் தகவல்களல்ல. ஒரு வார இதழில் வெளியான கட்டுரைகளின் தொகுப்பு. எளிய நடை, ஈர்க்கிறது.

நோபல் பரிசு பெற்ற ஏழு எழுத்தாளர்களின் ஏழு கதைகளைத் தேர்ந்தெடுத்து மொழிபெயர்ப்புச் செய்திருக்கிறார் திலகவதி.

சம்பந்தப்பட்ட எழுத்தாளர்களின் வாழ்க்கைச் சுருக்கங்களையும் தந்திருப்பது மொழிபெயர்ப்பாளரின் அக்கறையைக் காட்டுகிறது.

'மழையில் பூனை' கதையை எழுதிய எர்னஸ்ட் ஹெமிங்வே, தாம் சிறுகதை மன்னன் என்பதை நிரூபித்திருக்கிறார். ஓட்டலில் தங்கும் ஒரு தம்பதி; மனைவி, ஒரு மழை நாளில் ஓட்டலின் வெளியே மழையில் நனையும் பூனையைக் காப்பாற்ற நினைக்கிறாள். அதற்குள் அது எங்கோ ஓடிப் போய்விடுகிறது. தன்னுடைய சின்னச் சின்ன ஆசைப் பட்டியலில், தன் பூனை ஆசையையும் சொல்கிறாள். கணவனின் அலட்சியப்போக்கு நம்மையும் தாக்கும்போது, அறைக் கதவு தட்டப்படும் ஓசை. வாசலில் ஓட்டல் பணிப்பெண். கையில் பூனை. 'முதலாளி அளித்த பரிசு' என்கிறாள். நடையழகு கதையை உயரே உயரே தூக்குகிறது.

அசத்தலான இன்னொரு கதை - நதீன் கோ(ர்)டிமரின் 'தந்தையின் கடிதம்'. செத்துப் போன மகனுக்கு, செத்துப் போன தந்தை எழுதிய கடிதமாகக் கதையுக்தி. விஷயம்? ஒருவரையொருவர் எவ்வளவு வெறுத்திருக்கிறார்கள் என்பதே. 'நீயும் நானும் உன் அம்மாவும் இப்போது ஒன்றாக ஒரே கல்லறையில் கிடக்கிறோம்... அமைதியாக உறங்கும் மகனே! எனக்கும்

## படித்ததில் பிடித்தது!

எட்டுத் திக்கிலிருந்து ஏழு கதைகள்

திலகவதி

நொருப்பங்கள், கதைக்கரு, நேர்மையை அடிக்கோடிடும் அழகு, மனத்தைத் தொடும் முடிவு - எல்லாம் ஒரு கதையில் முடியுமா? ஓ! அதுதான் 'முட்டாள் கிம்பெல்' என்ற சிறுகதை. ஐஸக் பாஷெவில் ஸிங்கர் எழுதியது.

நம் இந்திய மண்ணின் ஈர்ப்போடும், பலத்த எதிர்பார்ப்போடும் ஆவலுடன் படிக்கத் துவங்கிய கதை 'விடுமுறைக் காலம்'. ஏக ஏமாற்றம் தந்திருக்கிறார் தாகூர்.

வெயிலின் வெம்மையை முப்பது பக்கங்களில் விவரிக்க இயலுமா? முடியும் என்று நிரூபித்திருக்கிறார் 'மதத் துரோகி'யின் கதாசிரியர் ஆல்பெர்காம்யு. கொடுமை -வெயிலை விட!

'உங்கள் டெலிபோனைப் பயன்படுத்தலாமா?' என்று யாராவது இளம்பெண் கேட்டால், தயவு செய்து உடனே கொடுத்துவிடுங்கள்! இல்லையென்றால் 'தொலைபேசியை உபயோகிக்க மட்டுமே வந்தேன்' கதையில் நடப்பதுபோல் ஆகிவிடும்! வெளியில் சென்ற மனைவி, தான் வீடு திரும்ப நேரம் ஆகிவிடும் போலிருக்கிறது என்று தன் கணவனுக்கு, (மாஜிக் நிபுணர்) தெரியப்படுத்த, ஒரு டெலிபோனைத் தேடிச் செல்லும்போது, கார் பழுதாகி, வேறு ஒரு வேனில் ஏறும் நிர்ப்பந்தம். மனநோய் விடுதிக்குச் செல்லும் வேன் அது! அவளையும் அங்கு கொண்டு தள்ளி விடுகிறது. அவள் நிஜமான மனநோயாளி என்று கருதி, வாழ்நாள் முழுவதுமே அதே விடுதியில் கழிக்க நேரிடுகிறது!

# நோபல் பரிசு பெற்றவர்களின் சிறுகதைகள்...

நீ அந்த அமைதியைத் தந்திருக்கலாம்' என்று கடிதம் (கதை!?) முடியும்போது மனதில் தைக்கிறது. முப்பது பக்கக் கதை! (ஹும்மா!)

விறுவிறுப்பு, சுவாரசியம், சரளம், இயல்பான

இத் தொகுப்பிலிருந்து தெளிவாய் தெரியும் விஷயங்கள்:

1. திலகவதி சிறந்த மொழி பெயர்ப்பாளரும்கூட.
2. மாபெரும் எழுத்தாளர்களின் கதைகள் எல்லாமே சுவாரசியமாய் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை! எளிதாகப் புரிய வேண்டும் என்பதுமில்லை!

— **பாமா கோபாலன்**

எட்டுத் திக்கிலிருந்து ஏழு கதைகள்/ தமிழாக்கம்: திலகவதி/ நர்மதா பதிப்பகம், சென்னை-17/ விலை ரூ.55.

''அந்த பைனான்ஸ் கம்பெனி கொடுத்த செக் திரும்பி வந்திடுச்சுங்க...''

''ஏன்? பாங்கில் பணம் இல்லையாமா?''

''அந்தப் பெயரில் பாங்க்கே இல்லையாம்!''

- பொள்ளாச்சி கே. சித்ரா



# உள்ளே வரலாமா?

19

"இதுவும் நார்மலான விஷயம்தானா சுகன்யா...?" அடி பட்ட பார்வையுடன் கேட்ட சேகருக்கு என்ன பதில் சொல்வது?

கட்டில் ஓரத்தில் உட்கார்ந்து முழங்காலுக்குள் தலை கவிழ்த்துக் கொண்டிருந்தாள் வசந்தி. கடந்த ஒரு மணி நேரத்தில் தனக்கு ஒரேயடியாகப் பத்து வயது கூடி விட்டது போல் உணர்ந்தாள் சுகன்யா.

மண்டபத்தை விட்டுக் கிளம்புகிற நேரத்தில் "வசந்தி, டூத் பிரஷ், டாய்லெட் கிட்டெல்லாம் எடுத்து வைச்சுக்கிட்டேயில்லே...?" என்று ஞாபகப்படுத்த,

"அதெல்லாம் எதுக்கு மன்னி? எல்லாம் அவர் வாங்கித் தருவார்!" - வசந்தியின் இயல்பு மாறிய பதில் பயமுறுத்தியது.

கட்டாயப்படுத்தி அவற்றை எடுத்து ஒரு பையில் திணித்து, மாற்றுடைகளுடன் பெட்டி அடுக்கித் தந்து புறப்படச் செய்தாள்.

சேகரின் வீட்டில், வாசலில் நிறுத்தி ஆரத்தி எடுக்க, "பாக்யத லக்ஷ்மி பாரம்மா..." என்று வசந்தியும் கூடவே இலேசாகப் பாடியது விபரீதமாய் ஒலித்தது. மஞ்சள் நீருடன் பித்தளைத் தட்டைச் சுழற்றிக் கொண்டிருந்த மாமியாரின் புருவம் இலேசாக உயர்ந்தது.

சுகன்யா வசந்தியின் தோளை அழுத்தி அடக்கினாள்.

உள்ளே அழைத்துப் போய் மணையில் அமர்த்தி, பாலும் பழமும் கொடுத்தபோது எல்லாம் சரியாகி விட்டது. சுகன்யாவிடம் கர்சிப் கேட்டு வாங்கி, கை துடைத்துக் கொண்ட வசந்தி, இயல்புக்குத் திரும்பி விட்டதாகவே தோன்றியது. சில நிமிடங்களில் ராமநாதனும் சரஸ்வதியும் விடைபெற்றபோது கூட, தைரியமாக துக்கத்தை விழுங்கிக் கொண்டு சிரித்தாள் வசந்தி.

சேகருக்கும் அவளுக்கும் ஒதுக்கப்பட்ட அறையில் சரம்சரமாக மல்லிகை தொங்கவில்லை. வசந்தியின் பெட்டியை உள்ளே வைக்கப் போன சுகன்யா அதைக் கவனித்துச் சிரித்துக் கொண்டாள். ஒரு மாபெரும் மலர்ச் செண்டு, டிரெஸ்ஸிங் டேபிள் மீது இருந்தது. அதனருகே வாழ்த்து அட்டை. 'வெல்கம், வசந்தி' என்று எழுதி சேகர் குடும்பமே கையெழுத்துப் போட்டிருந்தது. பார்வை, படுக்கை பக்கம் திரும்புவதைத் தவிர்க்க முடியவில்லை. ரம்மியமான வெளிர் நீல விரிப்புகளால் மூடப்பட்டு, ஓர் ஓரத்தில் மட்டும் இரண்டே இரண்டு சிவப்பு ரோஜாக்கள். அறையின் மறுகோடியில், கனமான ஸ்டூலின் மேல் தஞ்சாவூர் கிருஷ்ணர் ஓவியம். சின்ன வெள்ளி ஸ்டாண்டில் பொருத்திய இரண்டு ஊதுபத்திகள் சந்தன மணத்தைத் தவழவிட்டுக் கொண்டிருந்தன.

"அமானுஷ்யமா டுயட் கேட்கப் போறது...!" - முதலிரவில் ஸ்ரீராமிடம் தான் சொன்னதும் பின்னர் தூங்கிப் போனதும்... நடந்து முடிந்து ஒரு யுகமாகி விட்டது போல் தோன்றினாலும் இன்னும் ஓராண்டு கூட முடிந்திருக்க வில்லை.

"குட் நைட் சேகர்! வசந்தி, புது இடம்னு நினைக்காதே. இது உன் வீடு. உரிமையோடு இரு. காலைல மெள்ள எழுந்தா போதும்..."

நெற்றியை வருடி உச்சி மோந்த சேகரின் அம்மா,



மகளைப் பார்த்து ஓரக்கண்ணால் சிரித்தான். பனிச்சென்று அனைவருமே அவரவர் அறைகளுக்குள் போய்க் கதவடைத்துக் கொண்டார்கள். சுகன்யாவுக்கு வரவேற்பறை சோபாவில் தலையணை பெட்ஷீட் போட்டு வசதி செய்யப்பட்டிருந்தது.

"காலையில் பார்க்கலாம்..." சேகர் ரொம்ப இயல்பாக சுகன்யாவிடம் விடைபெற்றுக் கொண்டு, வசந்தியின் தோளைச் சுற்றி அணைத்து அழைத்துப் போனான்.

**வி**ளக்கு சுவிட்சைத் தேடி அணைத்துவிட்டு வந்து படுத்துக் கொண்டாள் சுகன்யா. தலைமாட்டில் டார்ச் லைட்டும், ஜாடியில் தண்ணீரும் வைத்திருந்த சம்பந்தியம்மாளின் முன்னேற்பாடும் கவனமும் பிடித்திருந்தது. கண்களை மூடிக் கொண்டபோது, ஸ்ரீராமின் முகம் விழித்திரைகளை நிறைத்தது. அவனிருந்தால், சுருட்டிக்கொண்டு வலித்த கணுக்கால்களை அழுத்தி, நீவி விடுவான். வலியில் தூக்கம் வர மறுக்கிறது. படுத்தவாக்கில் கால் விரல்களை மெள்ள விரித்து, நீட்டி மடக்கி பாதங்களுக்கும் கணுக்காலுக்கும் இதம் அளிக்க முயன்றாள் சுகன்யா.

நான்கு முறை அப்படிச் செய்ததும் வலி சற்று குறைந்ததாகத் தோன்றியது. ஐந்தாவது முறை விரல்களை நீட்டியபோது, கதவு திறக்கும் 'கிளிக்' ஒலி... நீட்டிய விரல்களை மடக்க மறந்து கவனித்தாள் சுகி. ஒலி, சேகர் - வசந்தி அறையிருந்த திசையிலிருந்து வந்தது. தொடர்ந்து, "வசந்தி இரு! வெயிட்..." என்று சேகரின் மெலிதான குரல்.

பதறி எழுந்தாள் சுகன்யா.

"மன்னி...!" ரகசியக் குரலில் அழைத்தபடி வந்து பற்றிக் கொண்ட வசந்தியின் கைகள் வெடவெடவென்று நடுங்கின.

"என்னாச்சு வசந்தி?" சுகன்யா மனத்திலிருந்த கலவரத்தை வெளிப்படுத்திக் கொள்ளாமல் உறுதியான தாழ்ந்த குரலில் பேசினாள்.

"எனக்கிது வேண்டாம்! ப்ளீஸ்... எனக்குப் பிடிக்கலை..." அத்தனை பயத்திலும் குரல் உயர்த்தாமல் பேச வேண்டும் என்பதை மட்டும் வசந்தி மறக்கவில்லை.



"இதோ பாரு! வசந்தி, நீ சின்னக் குழந்தையில்லே, என்னாச்சு இப்போ...?"

வசந்தியின் பிடி இறுக, சுகிக்கு உடம்பை வலித்தது.

"ஏய்! விடு... உனக்கு ஒண்ணும் ஆகாது. முதல்ல அழுறதை நிறுத்து. ஷ்..."

பிடி தளர்வதாக இல்லை. அவள் பயம் நிஜமானது; தன் ஒருத்தியால் போக்க முடியாதது என்பது புரிய சுகன்யாவுக்கு அதிக நேரமாகவில்லை.

அவள் அடங்கட்டும் என இரண்டு நிமிடங்கள் பொறுத்திருந்தாள். விளக்கைப் போடவோ, டார்ச் லைட்டை ஆன் செய்யவோ தயக்கமாயிருந்தது. தூங்கிப் போன சேகரின் உறவினர்கள் யாராவது வந்துவிட்டால், கேவலமாகிவிடும். இந்தப் பெண்ணை எப்படியாவது சமாதானப்படுத்தி பெட்ரூமுக்குள் அனுப்பியாக வேண்டும்.

"வசந்தி! இங்க பாரு. நான் சேகர்கிட்ட வந்து பேசறேன். பயப்படக்கூடாது. எல்லாம்

**கி. ராஜநாராயணன்** **?**

## தங்க நகை பரிசு!

**இந்த இருபத்தாறு வாரத் தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர் யார் என்பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங்கள். சரியான விடைக்கு, தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

தானா சரியாயிடும், கண்ணைத் துடைச்சுக்கோ."

மாலை மாலையாய் வழிந்த கண்ணீரே பதிலாக, சுகன்யா குரலைக் கடுமையாக்கிக் கிசுகிசுத்தாள்.

"நோ! இனிமே அழுதா எனக்குக் கோபம் வரும்... எழுந்திரு... நான்தான் சேகர்கிட்டே பேசறேன்னு சொல்றேன்னில்ல...?"

அவளைத் தூக்கி நிறுத்தி, ஏறத்தாழ தள்ளியபடிதான் பெட்ரூமுக்குப் போக வேண்டியிருந்தது. அங்கே போனதுமே பிடுங்கியெடுத்த அல்லித் தண்டாகத் துவண்டு கட்டிலின் விளிம்பில் சுருண்டமர்ந்தாள்.

அப்போதுதான் அடிபட்ட பார்வையுடன் கேட்டான் சேகர் :

"இதுவும் நார்மலான விஷயம்தானா சுகன்யா?"

மிக கௌரவமாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள் சுகன்யா.

"ஸாரி சேகர்! கல்யாண மண்டபத்துல வசந்தி அழுதது நார்மல்தான். இது நார்மல் இல்லை. நான் ஒத்துக்கறேன். என் பேர்ல தப்பு. நாங்க அவளை இதுக்கு சரியா தயார் பண்ணலைன்னு நினைக்கறேன்... சில விஷயங்கள்ல ரொம்பப் பெரியவளா இருக்கா. வேற சில விஷயங்கள்ல பச்சைக் குழந்தை..."

வசந்தி இந்த உரையாடலை கவனிக்கும் நிலையில் இல்லாமல் முகத்தைக் கைகளில் கவிழ்த்து அழுது கொண்டிருந்தாள்.

சுகன்யா குரலை மேலும் தாழ்த்திச் சொன்னாள். "சுபாவமாவே பயம் அதிகம். அதோட...."

"என்ன சுகன்யா? She doesn't like me?"

"ஐயோ! அப்படியில்லை... ரொம்ப பொஸஸிவ். அவளுக்கு மட்டுமே நீங்க உரிமையாயிருக்கணும்னு நினைக்கற ரகம். ரிசப்ஷன்ல என்னாச்சு? கொஞ்சம் ஞாபகப்படுத்திப் பாருங்க..."

"ஓ! ஓ!..." என்று ஏதோ பேராச்சர்ய உண்மை வெளிப்பட்டது போல் திகைத்தான் சேகர். ஒரு பெண்கள் படையே வந்து அவனைத் தோளில் தட்டி வாழ்த்திவிட்டுப் போயிருந்தது.

ஒரு நிமிடம் மௌனமாய் இருந்தான். பிறகு, "அவ்வளவுதானே! நான் அதை ரொம்ப கலபமா பேசி சமாளிச்சுடுவேன்..." என்று வசந்தியை நோக்கி நகர இருந்தவனைக் கைகூப்பித் தடுக்க வேண்டியதாயிற்று.

"பொறுமை! பொறுமை! சேகர். நீங்க நினைக்கிற மாதிரி அவ்வளவு எளிமையா காரியம் முடியும்னு எனக்குத் தோணலை..."

"சரி, நான் என்ன பண்ணணும்ங்கறீங்க? நீங்க வேணா இங்க உள்ள படுத்துக்கோங்க. நான் போய் அங்க ஹால்ல தூங்கறேன்..."

– விரக்தியின் உச்சத்திலிருந்து அவன் பேசியபோது சுகன்யாவுக்கு வேதனையாய் இருந்தது.

உண்மையைப் பளிச்சென்று உடைத்துப் பேச முடிவு செய்தாள். அறையை ஒட்டியிருந்த வராண்டா கதவைத் திறக்கச் செய்து, அங்கே அழைத்துப் போய்ச் சொன்னாள்.

"அவளுக்கு ஒரு மனோதத்துவ டாக்டர் உதவி தேவைன்னு நினைக்கறேன்..."

"ஓ காட்!"

"பயப்படாதீங்க, சேகர். சில பெண்களுக்கு இந்த மாதிரி பிரச்னை ஏற்படறதுண்டு. வசந்தி விஷயத்துல, வளர்ப்பு முறை, இயல்பான பயந்த சுபாவம், திடீர்னு, பழக்கமில்லாத நவீன சூழ்நிலைக்குத் தள்ளப்பட்ட அனுபவம் எல்லாமா சேர்ந்து பாதிச்சிருக்கு. கொஞ்ச நாளாவே திடீர் திடீர்னு இயல்பு மீறி நடந்துக்கறதும் கோபப்படறதும்... அப்பவே எனக்கு இந்தப் பிரச்னை முழுமையா புரிஞ்சிருந்தா இன்னிக்கு உங்களுக்கு இந்த ஏமாற்றம் ஏற்படாம தவிர்த்திருக்கலாம்."

"நோ சுகன்யா! நீங்க என்னைத் தப்பா எடை போட்டுட்டீங்க... எனக்கு ஏமாற்றமேயில்லை! வருத்தம்தான். உங்களை ஒரு சகோதரியா நினைச்சுச் சொல்றேன். இன்னைக்கே வசந்தியை முழுமையா என்னுடையவளாக்கிக்கணும்ங்கற வெறியெல்லாம் எனக்குக் கிடையாது. நான் காத்திருப்பேன். அவளை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு... என் வாழ்க்கை அவளோடதான்கிற தீர்மானத்துக்கு வர்றதுல எனக்கு எந்தச் சிரமமும் இருக்கல்லை... ஆனா..."

சுகன்யாவின் கண்கள் குபுக்கென்று கண்ணீரால் நிறைந்து விட்டன. 'ஸ்ரீராம் மட்டும் கூட இருந்திருந்தால்... இந்த நிலைமையை

இன்னும் கொஞ்சம் சீராக சமாளித்திருக்கலாமோ...?' என்கிற எண்ணம் எழுந்தது.

"ஸாரி! வெரி ஸாரி, சேகர்..." என்பதைத் தவிர வேறெதுவும் சொல்லத் தோன்றவில்லை.

"எந்தப் பிரச்னையானாலும் அதை வசந்தி எங்கிட்டயே சொல்லி, பேசித் தீர்த்துக்கலாமே. உங்ககிட்டே அவ ஓடி வருவானேன்...?"

"பயம்! பயம்தான் காரணம். அதைப் போக்கறதுக்கு உங்களால தான் முடியும்..."

"அதுக்கு அவ என்னை அனுமதிக்கணுமே. இப்படி விலகி ஓடிப் போனா நான் என்ன பண்ணுவேன்?"

சுகன்யா, வசந்தியிடம் போய் உட்கார்ந்தாள். சேகர் அவளைப் பின்தொடர்ந்து போனான்.

"வசந்தி!" சுகன்யா அழைத்தாள்.

மிக மெதுவாக நிமிர்ந்த முகத்திலிருந்த பீதி வேதனைப் படுத்தியது.

"பயப்படாதே வசந்தி..." என்றான் சேகர். "உன் அனுமதியோ, விருப்பமோ இல்லாம எதுவும் நடக்காது. பிராமிஸ்...!" அவள் கையை மெள்ளப் பிடித்துத் தூக்கி, அவன் சத்தியம் செய்தபோது மருதாணி விரல்கள் நடுங்கிக் கொண்டிருந்தன.

"மன்னி...! அப்பா அம்மாகிட்டே சொல்லிட மாட்டேள் இல்ல... அவா அப்புறம் என்னை மன்னிக்கவே மாட்டா..."

"இல்லை, சொல்லலை... நீ இப்ப மனசை இலேசாக்கி, பிரார்த்தனை பண்ணிண்டு தூங்கு... நானும் போய்ப் படுத்துக் கறேன்."

"எங்க அப்பா அம்மாவுக்கும் கூட இந்த விஷயம் போய்ச் சேராது, போதுமா...?" சேகர் சொன்னது கேட்டு நிமிர்ந்து பார்த்த வசந்தியின் கண்களில் நன்றியோடு இலேசான குற்ற உணர்வும் கலந்திருப்பதைக் கண்டாள் சுகன்யா.

இந்தப் பிரச்னை தீர்க்கக்கூடியதுதான் என்கிற நம்பிக்கை முளைவிட, சற்றே இலேசான மனத்துடன் படுக்கப் போனாள்.

சேகரின் மன அறையில் விடிய விடிய விளக்கெரிந்தது.

ஐந்தரை மணிக்கு விழிப்புத் தட்டியது. சுகன்யா எழுந்த போது ஃபில்டர் காப்பி மணத்தது. சமையலறையிலிருந்து வெளிப் பட்ட சேகரின் அம்மா கேட்டார்!

"நன்னா தூங்கினேயா சுகன்யா...?"

"ஓ. நிம்மதியா தூங்கினேன். தாங்க்ஸ்..."

பல்துலக்கி வந்தவளுக்குச் சூடாக காப்பி தந்தபோது கொஞ்சம் தயங்கிப் பேசினார் மாமி.

"ராத்திரி ஏதோ பேச்சுக்குரல் கேட்டாப்பல இருந்தது?"

சுகன்யா ஒருகணம் திணறினாள். உண்மையைச் சொல்வதா? மறைப்பதா?

"ஒண்ணுமில்ல மாமி... வசந்திக்கு திடீர்னு சந்தேகம். ரிசப்ஷனுக்குப் போட்டுக்கிட்டிருந்த நகையையெல்லாம் அவிழ்த்து அவசரத்துல யார்கிட்டே கொடுத்தோம்னு மறந்து போச்சாம். அதைத்தான் எங்கிட்டே கேட்க வந்தா.... நான் பெரியத்தைகிட்டயிருந்து வாங்கி பத்திரமா வைச்சிருக்கேன்னு சொன்னப்புறம் தான் நிம்மதியாச்சு."

தன்னால் கூட இப்படிக் கூசாமல் பொய் சொல்ல முடிகிறதே என்று ஆச்சர்யப்பட்டுக் கொண்டாள் சுகன்யா.

"அப்படியா?" என்ற மாமியின் குரலில் அவநம்பிக்கை தொனித்தது.

(தொடரும்)



"கணித ஆசிரியரா இருந்தவனெல்லாம் கவிதை எழுத வந்து ரொம்பக் கஷ்டப்படுத்தறானுங்கப்பா..."

"எப்படி?"

"முக்கோணக் காதல் கவிதை எழுதச் சொன்னா, சம பக்க முக்கோணமா, செங்கோண முக்கோணமான்னு கேட்கறான்!"

– வெ. ராஜாராமன்



• ராசன் பேக்

பெங்களூர் சிவாஜி நகர் தொகுதியில் ஒரு பிள்ளையார் கோயில் உள்ளது. ஒரு நூற்றாண்டுக்கு முந்தையது. தோல் தொழிலாளர்களின் வழிபாட்டுத் தலமான இது, சிதிலமடைந்தது. அந்தக் கோயிலை கர்நாடக அமைச்சர் செப்பனிட்டுள்ளார். இதில் என்ன விசேஷமென்றால், 1)அவர் காவல்துறை அமைச்சர்; 2) சொந்தச் செலவில் செப்பனிட்டுள்ளார்; 3) மூன்றரை லட்சம் செலவு செய்தார்; 4) இத்தனைக்கும் இவர் ஹிந்து அல்ல; பெயர் ரோசன் பேக்.

– ப. மூர்த்தி.

# உங்கள் வளமான எதிர்காலத்திற்கு
# எங்கள் விசேஷ சேமிப்புத் திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



இன்றே எங்களிடம் ஒரு டெபாஸிட்டைத் துவக்கி,
வளமான மகிழ்ச்சியான வருங்காலத்தை எதிர்நோக்குவீர்

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LIMITED**

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்லேஸ் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4-ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Mathison

இண்டர்நெட்டில் பிடித்தவை



# மாதா கோவில்கள் மாதிரி மதுரை கோவிலும் வருமா?

அச்வின் குஷ் மூடில் இருந்தான். சேட் போல திண்டு தலையணை. இரண்டு பக்கத்திலும் அடுக்கி வைத்த தீபாவளி மலர்கள். பிளாஸ்கில் காபி. டேப் ரிகார்டரில் காதல் தேச சிக்காளிகளின் 'குத்துதே... குடையுதே...' பிரலாபம்.

அச்வின் மெல்ல எழுந்து கம்ப்யூட்டரை ஆன் செய்ய, டேப் ரிக்கார்டரில் தொடர்ந்து 'காட்பரீஸ் கசக்குதே...'

"அதையும்தான் பார்க்கலாமே" என்றபடி அச்வின் கொடுத்த இண்டர்நெட் விலாசம் 'http://www.nestle.com'. சர்வதேச அரங்கில் காட்பரீஸோடு போட்டா போட்டி- காட்டா குஸ்தியாக மோதி மில்க் சாக்லேட் விற்கிற நெஸ்லேயின் தகவல் வீடு அது.

விதவிதமான சாக்லேட்டுகளின் கலர்க்கலர் படங்கள்... 'இது புதுசு' என்று சமீபத்தில் அறிமுகமான புது பிராண்ட் பற்றி விவகாரமில்லாத ஜொள்ளு வர்ணனை...

"சாக்லேட் சரித்திரம் படிக்கலாமா?"

மெக்சிகோ பழங்குடியினரான மாயன் இன மக்கள், கல் தோன்றி மண் தோன்றா அல்லது காதல் தோன்றி காட்பரீஸ் தோன்றாத காலம் தொட்டு கோக்கோ தாவரக் கொட்டைகளிலிருந்து ஒரு கறுப்புக் கஷாயத்தை இறக்கிப் பருகி, "பேஷ்.. பேஷ். ரொம்ப நல்லா இருக்கு..." என்று சிலாகித்துக் கொண்டிருந்தார்களாம். அந்த கசப்பு திரவத்தை முதன் முதலாக யாருக்காவது குடிக்கக் கொடுத்து அஷ்ட கோணலாக அன்னார் முகம் போன ரியாக்ஷனைப் பார்த்துப் பெயர் வைத்தார்களோ என்னவோ 'கோக் கோஹ' வாக்யுச்ட்ல்' என்று அதற்கு நாமகரணம்!

1523ல் வணிகம் செய்ய வந்த கோர்டெஸ் இனத்துக்கு பண்ட மாற்றாக இந்தக் கோக்கோ கொட்டைகளைத்தான் கொடுத்தார்களாம்.

1875ல் டேனியல் பீட்டர் என்பவர் எப்படி இந்த கோக்கோ கொட்டைகளை வறுத்து வடிநீர் இறக்கிக் கூடவே பாலும் சர்க்கரையும் சேர்ப்பது என்று கண்டுபிடிக்க, அதுவரை வெறும் வாயை மென்றவர்களுக்கு மில்க் சாக்லேட்டும், பல் வைத்தியர்களுக்குப் பணமும் கிடைக்க ஆரம்பித்தது. பீட்டரும் அவர் நண்பர் ஹென்றி நெஸ்லேயும் சேர்ந்து தொடங்கியதுதான் நெஸ்லே கம்பெனி.

அச்வின் கொடுத்த அடுத்த விலாசம்- 'http: //rubens.anu.edu.au/' ஆஸ்திரேலிய தேசியப் பல்கலைக் கழகத்தின் நுண்கலைத் தகவல் பக்கங்கள்.

"உலகின் ஓவிய வரலாற்றையே இங்கே பதினெட்டாயிரம் படங்களாகப் போட்டு வச்சிருக்காங்க... குகை ஓவியத்திலே இருந்து, இம்ப்ரெஷனிஸம் போஸ்ட் மார்டனிஸம், க்யூபிஸம் அது இதுன்னு பெயரையும் படத்தையும் வச்சு மிரட்டறாங்களே... சகலமும் இங்கே உண்டு. கூடவே, கட்டடக் கலை பற்றியும் இது போல விவரம்..."

சொல்லியபடியே அவன் பிரான்ஸ் நாட்டு மாதாகோயில்கள் என்ற பகுதியைத் தேர்ந்தெடுத்து. இருளும் வெளிச்சமும் மாறி மாறிப் படர விரிந்த சர்ச்சின் கம்பீரமான படங்களை வரிசையாகப் பார்த்துக் கொண்டு போக, மனசில் கேட்கிற மாதாகோயில் மணியோசை.

மதுரை கோவிலை இப்படி இண்டர்நெட்டில் காண்பது எந்நாளோ!

- இரா. முருகன்

இண்டர்நெட் கம்ப்யூட்டர் உதவி: SAP Computer (p) Ltd, Chennai - 17.







• அமுல்பேபி அணிவகுப்பு!

# பிரதமர் பதவிக்குக் குறிவைக்கிறாரே கேசரி?

● தீபக் கண்ணன், ஹோசூர்.

? நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள்; இந்த அழகிப் போட்டிகளால் என்ன லாபம்?

! வருமானவரி அதிகாரிகள்தான் சொல்ல வேண்டும். ஏ.பி.சி.எல் வருமான வரி கட்டினால் நிச்சயம் லாபம்தான்.

● சிம்மவாஹினி, சென்னை – 39.

? 'கல்கி' படத்தில் சிறு பாகம் ஏற்று நடித்திருக்கும் கே. பாலசந்தரை மட்டும் யாரும் பாராட்டக் காணோமே...?

! அந்தக் காட்சியில் அவர் நடிப்பைக் காட்டிலும் அதிகமாய்க் கவர்ந்தது நையாண்டிதான். சினிமா தயாரிப்பாளர்கள், டைரக்டரை என்ன பாடுபடுத்துகிறார்கள் என்பதைப் பிட்டு பிட்டு வைத்து விட்டார்!

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

? 'ஜெ ஆதரவாளர்கள் மீது மட்டுமே நடவடிக்கை எடுப்பது ஏன்?' என்று காளிமுத்து கேட்கிறாரே?

! எதிர்ப்பாளர்களின் சொத்து விவரம் பற்றியும் கட்டாயமாக விசாரித்து நடவடிக்கை எடுக்க வேண்டும். இல்லையெனில், ஆளும்கட்சியும் மக்களின் எதிர்ப்பை எதிர்கொள்ள வேண்டியிருக்கும்!

● மஞ்சுகதேவன், மும்பை – 86.

? ஏட்டிக்குப் போட்டி – தற்போதைய நிலையில் ஓர் உதாரணம்?

! வாழப்பாடியும் குமரியாரும் ஒருவர் மீது ஒருவர் தொடுக்கும் குற்றச்சாட்டுகள்!

● எம். பிரபு, குமராட்சி.

? அரவிந்த்சாமி, அஜீத்குமார், அப்பாஸ் – மூவரில் தராசைக் கவர்ந்தவர் யார்?

! பார்வைக்கு மூவருமே அமுல்பேபி ரகம்தான் என்றாலும் நடிப்பில் அரவிந்த்தான் முதல் மார்க். அஜித் இன்னும் நிறைய உழைக்கணும். அப்பாஸ்.. இன்னும் ஒரிரு படங்கள் வரட்டும், அப்பால சொல்றேன்.

● எஸ். ஏ. என். செந்தில்குமார், சூலூர்.

? பிரதமர் பதவியை அடைய சீதாராம் கேசரி திட்டமிட்டுச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறாரா...?

! ராவ் ஆதரவாளர்களை விலக்கி, ராவால் விலக்கப்பட்டவர்களை மறுபடி கட்சிக்குள் அனுமதித்து, கூடவே ராவின் நாடாளுமன்ற கட்சித் தலைமையைப் பறிக்கவும் நடக்கும் சூழ்ச்சிகளைப் பார்த்தால், பிரதமர் பதவி ஆசை கேசரிக்கும் உண்டு என்றுதான் தோன்றுகிறது.

● ஏ.எம். பழனிச்சாமி, சிங்காநல்லூர்.

? சமீபத்தில் கேட்ட அதிர்ச்சியான செய்தி?

! 'பிரிட்டனில், எல்லா பாதுகாப்பு ஏற்பாடுகளையும் மீறி, அரசாங்க பட்ஜெட் ஒரு பத்திரிகைக்கு மட்டும் முன்கூட்டியே கிடைத்து விட்டதுதான்! நல்ல வேளையாக, அம்பலமான பட்ஜெட்டை அந்தப் பத்திரிகை, அரசிடமே திருப்பிக் கொடுத்துவிட்டது.

● டி. பகபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

? லஞ்சத்தை ஒழிப்பதற்காக மற்ற கட்சிகளுடன் இணைந்து போராட காங்கிரஸ் தயாராமே...? – மன்மோகன் சிங் சொல்கிறாரே?

! பாவம்! மன்மோகன் மட்டும் தன்னந்தனியாகப் போராட்டத்தில் குதிக்க வேண்டியிருக்கும்.

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

? இந்தியக் கலாசாரத்தை உயர்த்திப் பிடிப்பதே இலட்சியம் என்று அறிக்கை விடும் பி.ஜே.பி, மைக்கேல் ஜாக்சனின் இசை நிகழ்ச்சிக்கு வரிச் சலுகை காட்டியிருக்கிறதே...? இது எவ்வகையில் நியாயம்?

! சலுகை ஜாக்ஸனுக்கு அல் [illegible] நிகழ்ச்சியை!



• சாணக்கியம்...!



• சாதனை!

ஏற்பாடு செய்தவர்களுக்குத்தான். அதுவும், கட்டண வசூலில் கணிசமான பகுதி தாக்கரே குடும்பத்தினர் நடத்தும் அறக்கட்டளையை வந்தடையும் என்பதால். ஆனால், நிகழ்ச்சி ஏற்பாடு செய்தவர்கள் நஷ்டக் கணக்குக் காட்டி, தலையில் அல்லவா கை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்! நன்கொடை பெறும் நோக்கமும் நிறைவேறவில்லையே!

● **அ. இராமசுப்பு, கோவில்பட்டி.**

? *'அழகிப் போட்டிக்கு எதிர்ப்பு தேவையற்றது; முதலில் சினிமாவில் வரும் ஆபாச காட்சியை திருத்தக் கோருங்கள்' என லதா மங்கேஷ்கர் கூறியுள்ளாரே?*

! டி.வி.யில் பார்த்தமட்டில் சொல்கிறேன் - பல சினிமாக்களில் வருகிற ஆபாசக் காட்சிகள், நடனங்கள் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஊறு விளைவிக்கும் 'விஸ்கி' என்றால், பெங்களூரில் நடந்த அழகிப் போட்டியும் அதையொட்டிய கலை நிகழ்ச்சிகளும் சாதாரண மினரல் வாட்டர்! விகார உணர்வுகளுக்குச் சிறிதும் இடமளிக்கவில்லை.


• நடிப்பு எப்படி..?


• தன்னந் தனியாக...


• எப்படி செய்வார்?


• ஆசை இருக்கு!

● **இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

? *த.மா.கா. தலைவர் மூப்பனார், மாநாடு நடத்துவதில் காட்டும் கவனத்தை, கட்சியின் ஆக்கபூர்வமான பணிகளில் செலுத்தலாமே..?*

! மாநாடு நடத்துவது கட்சியின் வளர்ச்சிப் பணியில் ஓர் அம்சம்தான். ஆடம்பரம்தான் கூடாது.

● **கே. ஜெயலக்ஷ்மி, சென்னை - 78.** ☐

? *ஜனநாயக நாட்டில், ஒருவர் பதவியிலிருந்து விலகியபிறகு, அவருக்கு மக்களின் வரிப் பணத்தைச் செலவழித்துப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமா? அவசியமா?*

! பாதுகாப்புத் தருவது தலைவருக்கு மட்டுமல்ல; தேசத்தின் கௌரவத்துக்கும்தான். முன்னாள் பிரதமர், முதல்வர் போன்றோருக்கு ஏதாவது ஆபத்து வந்தால் நாட்டுக்கே தலைகுனிவு அல்லவா?

● **வான்மதி, பரமத்தி வேலூர்.**

? *கே.பி.யின் 'கல்கி' படத்துக்கு 'ஏ' சர்டிபிகேட் எப்படிக் கொடுத்தார்கள்?*

! கதையின் அடித்தளம் 'திருமண பந்தத்தை மீறுதல்' என்பதால்... ஆனால் வேறு பல சினிமாக்களில் வருகிற வடிகட்டின ஆபாசத்துக்கு 'யூ' சர்டிபிகேட் தரப்படுவதைத்தான் ஜீரணிக்க முடியவில்லை.

● **மணிப்புறா, திருச்சி - 8.**

? *இவ்வாண்டின் உலக அழகியிடம் நீங்கள் கேட்க விரும்பும் கேள்வி...?*

! 'எல்லோரையும் சந்தோஷப்படுத்துவதே முதல் நோக்கம் என்கிறீர்களே... அதை எப்படி செய்யப் போகிறீர்கள்?'

● **என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.**

? *தி.மு.க. ஆட்சி தொடங்கி இதுவரை செய்த உருப்படியான நல்ல காரியம் எது என்று கூற முடியுமா?*

! பல ஆண்டுகளாக கிடப்பில் போடப்பட்டுக் கிடந்த உள்ளாட்சித் தேர்தல்களை நடத்திக் காட்டியிருப்பது நிதர்சனமாகத் தெரியவரும் சாதனை. மின் உற்பத்தி பெருக்கம், தொழில் உற்பத்திப் பெருக்கம், காவிரி பிரச்னைக்குத் தீர்வு, தெலுங்கு - கங்கைத் திட்டம் போன்ற பலப்பல அம்சங்களுக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டிருக்கிறது.... ஓராண்டு சென்றபின்தான் சாதனைகளை எடைபோட முடியும்.

● **சத்தியப்பிரியன், சென்னை - 15.**

? *ஸ்ரீநாத்தின் சாதனை பற்றி?*

! மூன்று டெஸ்ட் தொடரில், முதல் டெஸ்ட்டில் வெற்றி! ஸ்ரீநாத்தைத் திரும்பவும் கடைசி கட்டத்தில் பந்து வீசச் செய்தது டெண்டுல்கரின் சாணக்கியம். அதுவே ஆறு விக்கெட்டுகள் வீழ்த்திய ஸ்ரீநாத்துக்குப் பெரும் புகழையும் பெற்றுத் தந்தது. ஆனால் தென் ஆப்பிரிக்க அணியினர் மீது இந்திய கிரிக்கெட் ரசிகர்கள் கல்லெறிந்த சம்பவத்துக்காக, தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்திய தூதர் வருத்தம் தெரிவித்து, மன்னிப்புக் கோர நேர்ந்ததுதான் சோகம்.

**☐ ரூ. 25 பரிசு பெறுபவர் :**
**கே. ஜெயலக்ஷ்மி,**
**107, பொன்னம்பலம் சாலை,**
**கே. கே. நகர்,**
**சென்னை - 600 078.**

**கிரிக்கெட் மாதிரி ட்ரயத்லான் போட்டிகள் மக்களைக் கவருவதில்லை என்றாலும் இதில் நமது தமிழ் நாடுதான் முன்னணியில் இருக்கிறது என்பது சந்தோஷமான விஷயம்.**

# இந்த முறையும் தங்கத்தைத் தட்டும் நம்பிக்கை!

இந்த ஆண்டு, ட்ரையத்லானுக்கான ஆசிய கோப்பைப் பந்தயங்கள் சென்னையில் நடக்கவிருக்கின்றன, அடுத்த வாரம். ஜப்பான், சீனா, ஹாங்காங், சிங்கப்பூர், கொரியா, கஜகஸ்தான், மலேஷியா, பிலிப்பைன்ஸ், நேபாளம், உஸ்பெகிஸ்தான் போன்ற பல நாடுகளின் விளையாட்டு வீரர்கள் (வீராங்கனைகளும்தான்) கலந்து கொள்கிறார்கள்.

ட்ரையத்லான்?

ஒன்றரைக் கிலோ மீட்டர் தூரம் நீச்சல் அடித்த கையோடு, ஐந்து கிலோ மீட்டர் தூரம் சைக்கிள் ஓட்டி, உடனே பத்து கிலோ மீட்டர் ஓட வேண்டும். (இதில் வெற்றி பெற்றால் கையோடு கோப்பையைப் பெறலாம்).

தமிழ்நாடு ட்ரையத்லான் குழுவின் செயலாளர் ரேகா ராமச்சந்திரன், "கடற்படையினர் குடியிருப்புக்கு அருகில் உள்ள கடல் பகுதியைத்தான் நீச்சலுக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். (சர்வதேச ட்ரையத்லான் போட்டிகளில் நீச்சல் குளங்களில் நீந்த அனுமதியில்லை). சைக்ளிங்கிற்கு மன்றோ சிலை உள்ள சாலைப் பகுதியையும், ஓட்டத்திற்கு தொலைக்காட்சி நிலையத்திற்கு அருகில் உள்ள சாலையையும் தேர்வு செய்திருக்கிறோம்" என்றார்.

"மொத்தம் நூற்றி இருபது போட்டியாளர்கள். இவர்களில் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் மட்டுமே நாற்பத்தி இரண்டு பேர்! இந்த நிலைக்கு முக்கியமாக மூன்று காரணங்களைக் குறிப்பிடலாம்.

"ஒன்று வெப்பநிலை, பெரும்பாலான வடஇந்திய நகரங்களில் ஜூனிலிருந்து ஆகஸ்ட் முடிய மூன்றே மாதங்கள்தான் நீச்சல் பயில முடிகிறது. மற்ற மாதங்களில் கடும் குளிர். தமிழ் நாட்டில் அப்படி இல்லை. பெரிய கடற்கரையும் அதை ஒட்டி அமைந்த நீச்சல் குளமும் எல்லாக் காலங்களிலும் பயிற்சிக்கு மிக ஏற்றவை.

"அமுதா, ஆறுமுகம், கஜலட்சுமி என்று தேசிய ட்ரையத்லான் சாம்பியன்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களாகவே இருப்பது இங்குள்ளவர்களுக்கு ஓர் உந்து சக்தி.

"மூன்றாவது காரணமாக இந்திய ட்ரையத்லான் கூட்டமைப்பின் உதவிகளையும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். வருடம் முழுவதும் இலவசப் பயிற்சி! நீச்சலுக்கு உதவும் உபகரணங்கள், வேகமாகச் செல்ல இறக்குமதி செய்யப்பட்ட சைக்கிள்கள் ஆகியவை கூட பயிற்சிக் காலத்தில் இலவசம்!

"ஸ்போர்ட்ஸ் டெவலப்மென்ட் அதாரிட்டியின் உதவியையும் குறிப்பிட்டே



• அமுதா:
நம்பிக்கை
நட்சத்திரம்!

ஆகவேண்டும். பயிற்சிக்காக இத்தனை பெரிய 'வளாகத்தை' அனுமதித்திருக்கிறார்கள்" எனும் ரேகா ராமச்சந்திரன், இம்முறை பயிற்சிக் காலமான ஒரு மாதத்துக்கும் இதற்கெனவே ஒரு சமையல்காரர் நியமிக்கப்பட்டு, சத்து நிறைந்த உணவுகள் சமைத்துப் போட்டியாளர்களுக்கு வழங்கப்படுவதையும் குறிப்பிட்டார்.

ஆசியக் கோப்பையோடு பரிசுத் தொகையும் உண்டு. சென்ற முறை இது 15,000 ரூபாயாக இருந்தது. இம்முறை உயர்த்தப்படுமாம். தவிர டி.வி. செட், வாஷிங் மிஷின் போன்ற அதிகப்படி ஊக்கப் பரிசுகளும் உண்டு.

தமது பிரிவைப் பொறுத்தவரை சென்ற ஆண்டைப் போலவே இந்த ஆண்டும் தங்கத்தைத் தட்டிவிடும் நம்பிக்கையிருக்கிறது அமுதாவுக்கு. "ஆகஸ்ட் மாதம் ஓடும்போது கீழே விழுந்து முழங்காலிலே அடிபட்டது. நல்லவேளையா இப்போ சரியாயிடுச்சு. சைக்கிள் ஓட்டுவதிலே முன்னைவிடக் கொஞ்சம் முன்னேறியிருக்கிறேன். அதிக அளவில் ஆரஞ்சு ஜூஸ் குடிச்சு உடலை ட்ரிம்மா வச்சுக்கிறேன். தினமும் இரண்டு செஷன்கள் பயிற்சி என்று இருந்ததை, இந்த ஒரு மாதமாக மூன்றாக அதிகரித்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் அமுதா, நம்மிடம்.

சென்ற ஆண்டு ஆசியப் போட்டியில் ராங்க் இல்லை என்றாலும், அதற்கு முன் சீனாவில் நடைபெற்ற ஆசியப் போட்டிகளில் நான்காம் இடத்தைப் பெற்றிருக்கிறார் ஆறுமுகம். நம் தேசிய சாம்பியன். போட்டியின் முதல் பகுதியான நீச்சலில் கொஞ்சம் முன்பின்னாக வந்தாலும், வேகமாகச் சைக்கிள் ஓட்டுவதில் தமக்குள்ள திறமை காரணமாக இதை ஈடுகட்டி விடும் நம்பிக்கையிருக்கிறது இவருக்கு.

"இவர்களோடு நிர்மல் மற்றும் கர்நாடகாவைச் சேர்ந்த ஸ்ருதி ஆகியோரும் நம்பிக்கை அளிப்பவர்களே" என்கிறார் இவர்களுக்கெல்லாம் பயிற்சி கொடுத்துக் கொண்டிருக்கும் வீரபத்ரன். வெவ்வேறு மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் கற்று வந்திருந்த விதவிதமான உத்திகளுக்கேற்ப, அவற்றைக் கூர் தீட்டும் விதத்தில் அவர் பயிற்சி கொடுத்துக் கொண்டிருந்ததைப் பார்க்க முடிந்தது. "இம்முறை நம் நாட்டுக்கு நான்கு மெடல்களாவது கிடைக்குமென்று நம்புகிறேன்" என்றார்.

இடையொன்று நமக்கு ஒரு சந்தேகம். கடினமான இந்த ட்ரையத்லான் போட்டிகளில் எவ்வளவு வயது வரை கலந்து கொள்வது நடைமுறையில் சாத்தியம்? "அறுபதிலிருந்து அறுபத்தைந்து வயதில் உள்ளவர்களுக்கான பிரிவு கூட இந்தப் போட்டியில் இருக்கிறது. அதில் கொரியா, ஜப்பான் ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்கள் கலந்து கொள்கிறார்கள்" என்றார் ரேகா ராமச்சந்திரன்.

- ஜி.எஸ்.எஸ்.

## வட்டமேஜை

✉ கார் புரட்சி பத்தி நல்லாத் தான் எழுதினீங்க. என்ன பண்றது, நம்மகிட்ட அவ்வளவு வசதி கிடையாது! இப்போ வாங்கறவங்களும் யாரும் வெளில இல்ல! மத்தவங்களும் வாங்க பயப்படறாங்க! இந்தச் சமயத்தில போய் இந்த மாதிரி நியூஸ் போடறீங்களே?

பு. புளியம்பட்டி,
அ. அருண்பிரகாஷ்.

✉ 'கண்ணீர் வெள்ளமும் விண்ணில் சோகமும்!' தலையங்கம் கண்ணில் நீரை வரவழைத்தது. மண்ணில் வெள்ளம், இயற்கையின் சீற்றம். இதை ஓரளவு புரிந்து கொள்ளலாம்! விண்ணில் சோகம் முழுக்க முழுக்க மனிதனின் தவறல்லவா. சிறு அலட்சியம் கூட எவ்வளவு பெரிய பாதிப்பை ஏற்படுத்தும் என்பதை பொறுப்பான பதவியிலுள்ளவர்கள் இனியாவது உணரட்டும்!

மதுரை-16, வி. பி. காந்தி.

# கார் வாங்கக் கூடியவங்க 'வெளியில' இல்லையே!

### ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

✉ தலையங்கத்தில், ஆந்திரப் புயலில் காணாமல் போன மீனவர்களின் எண்ணிக்கை மட்டும் 985 என்றும் அதிநவீன செயற்கைக் கோள் தகவல் தொடர்புகளுக்கு கோடிக்கணக்கில் செலவழித்தும் இவ்வளவு துயரங்கள் ஏன் என்றும் கேட்டுள்ளீர்கள். குறைந்த காற்றழுத்த மண்டலம் வங்கக் கடலில் உருவாகிப் புயலாக மாறும் முன்பு - சாதாரண வானிலை இருக்கும்போதே மீனவர்கள் கடலுக்குள் ரொம்ப தூரம் சென்று விடுகிறார்கள். சில சமயம் மீனவர்கள் ஒரு வார காலம் கூட கடலிலேயே இருக்கும் வழக்கமும் இருக்கிறது. அவர்கள் கடலுக்குள் செல்லும் போது நல்ல வானிலை இருக்கிறதென்பதாலும், புயல் என்பது எதிர்பாராத தாக்குதல் என்பதாலுமே மீனவர்கள் அவ்வாறு கடலினுள் செல்ல எத்தனிக்கிறார்கள். சாட்டிலைட் மூலம் ஒவ்வொரு கட்டுமரத்து மீனவர்களுக்கும் தகவலளிப்பது என்றால் கட்டுமரத்து மீனவர்களிடமும் ரிசீவர் செட்டுகளும் இருக்க வேண்டும். அதைவிட, மிக மலிவான விலையில் ஒவ்வொரு மீன்பிடி படகு, விசைப் படகு, கட்டுமரம் இவற்றிற்கும் வயர்லெஸ் செட்டுகளை வாடகைக்கோ அல்லது தவணை முறையிலோ மீனவர்களுக்கு அளித்து, கடற்கரையிலிருந்து அவர்களுக்கு வானிலையையும், புயல்தாக்கக்கூடிய அபாயத்தையும் 24 மணி நேரமும் ஒலிபரப்பிக் கொண்டே இருக்க ஏற்பாடு செய்ய வேண்டும். Cost guard கப்பல்களிலிருந்தும் இம்மீனவர்களுடன் இடைவிடாமல் லோகல் மொழிகளில் தொடர்பு வைத்துக் கொண்டேயிருக்க வேண்டும். அப்போதுதான் மீனவர்களின் பாதுகாப்பு உத்தரவாதம் பெறும்.

சென்னை - 40,
எம். எஸ். நளினி.

✉ 11 வயது டைரக்டர் மனுஷ்நந்தனின் வெற்றிக்குக் காரணம் அவனது சொந்தத் திறமை மட்டுமல்ல; அவனது பெற்றோர் அவனை வளர்த்த முறையையும் சேர்த்துத்தான் சொல்ல வேண்டும்!

லால்குடி, எம். ராஜேந்திரன்.

✉ 'நக்கீரன்' கோபால் அவர்களின் சந்திப்பு மூலம், தொழிலுக்கு மூலதனம் பணமல்ல; துணிச்சலும் தன்னம்பிக்கையும் தான்! என்பது புரிந்தது.

காப்பரத்தாம்பட்டி,
கே. ராஜாதிருவேங்கடம்.

✉ தம் மீது வெறித்தனமான தாக்குதல் நடத்திய தம்மைக் கொடுமையான சித்ரவதைக்கு ஆளாக்கிய அந்த அமெரிக்க வீரர்களின் நினைவுச் சின்னத்திற்கே போய் மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்திய 'கிம்'மின் செயல், அவரின் பெருந்தன்மையை உணர்த்துகிறது.

பூனாம்பாளையம்,
ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ 'சிரித்துக் கொண்டே இருப்பேன்' கட்டுரையில் வடவியட்நாமுக்கு ஆதரவாக அமெரிக்கா போரிட்டதாக வந்தது தவறு. தெற்கு வியட்நாம் சார்பாகத்தான் போரில் இறங்கியது.

வேலூர் - 6,
எல். கோபாலகிருஷ்ணன்.

✉ 'அவ்வை சண்முகி' பட விமர்சனம் படித்தேன். 'கமல்' படமென்பதற்காக 'ஆஹா... ஓஹோ' என்று தலைமேல் வைத்துக் கூத்தாடாமல் குறைவான நிறைகளையும், நிறைவான குறைகளையும் அலசிய பாணி அலாதியாய் இருந்தது. கண்ணியக்குறைவான காட்சிகளைக் கண்டித்திருப்பது ஆறுதலாக இருந்தது.

மதுரை - 14,
எஸ். வைத்தியநாதன்.

✉ போக்குவரத்துத் துறை அமைச்சருடன் அதிரடி விசிட் படித்தேன். மாட்டைத் தண்ணீர்த் துறைக்கு கூட்டிக் கொண்டுதான் போக முடியும். குடிக்க வைக்க முடியாது. நவீன கருவிகள் எத்தனை வாங்கிக் கொடுத்தாலும், ஊழியர்களின் மனோபாவம் மாறி, உழைப்பில் அக்கறை வந்து, பணியில் கவனம் செலுத்தினால்தானே நமக்கு விடிவு காலம்?

சென்னை - 17, ஏ. ராமன்.

# 22nd Year Art Festival 1996



Ph : 4997788

# Kartik Fine Arts (Regd.)

39. Bheemanna Garden Street, Chennai - 600 018.

(7th Dec. 96 to 1st Jan. 1997)



S. Sowmya

## Inauguration

on Saturday the 7th Dec. 1996 at 06.00 p.m.
at NARADA GANA SABHA HALL ,
T.T.K. Road, Chennai - 600 018
Hon'ble Shri.**P. Chidambaram**
( Union Minister for Finance, Govt. of India, )
will confer the title *"Isai Peroli"* on Smt. **S. Sowmya**
**Dr. M.A.M. Ramaswamy**
(Pro Chancellor, Annamalai University)
will preside.
Dr. Semmangudi **R. Srinivasa Iyer** will felicitate.
Smt. **M.S. Subbulakshmi**
will light the *"Kuthuvilakku"*

06.00 p.m. Prayer by Pallavi SPB
07.15 p.m. Flute by Master M.S. SHASHANK -
Trichy Ramanujacharyalu - Mannargudi Easwaran

| | | |
|---|---|---|
| A.V.S. RAJA<br>President | L.SABARETHAM<br>Chairman | R. RAJAGOPAL<br>M.R. KRISHNAMURTHI<br>Secretaries. |

**Co-Sponsors :** Ashok Leyland Finance • Balaji Group • Chettinad Cement Corporation • City Union Bank • ESSAR Group • Fuller KCP Ltd. • GR Thanga Maligai • India Cements • IOB • Larsen & Toubro • Lalitha Jewellery Mart • Madras Cements • Mohan Breweries • Nalli • Ponds (India) Ltd. • Reliance Industries Ltd. • Shriram Group • State Bank of India • Sri Sankar Agencies • Sangeet Natak Akademi. • Saravana & Co. • Sri Palaniappa Gounder • KC Palanisami & Co. • United India Insurance • TEAM • Taj Group • Vijay Plasweares.

EFFICIENT

# ஜாலி போட்டி - 19

## பரிசு ரூ. 5000!








இந்தத் தலைவர்களுக்குப் பொருத்தமாக எந்தப் பட்டம் கொடுக்கலாம்? தலைவர்களையும் பட்டங்களையும் மாற்றிக் கொடுத்திருக்கிறோம். நீங்கள் சரியான பட்டங்களைக் கீழுள்ள கூப்பனில் எழுதி எங்களுக்கு அனுப்புங்கள்.

அனைத்தையும் சரியாக எழுதுபவருக்கு ரூ.5000 பரிசு. பலர் சரியாக எழுதினால் குலுக்கல் முறையில் ஒருவருக்கே பரிசு!

**கடைசி தேதி: 16.12.96**

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

1. சுப்ரமணியம் சுவாமி - நித்திரைநாயகர்
2. ராமதாஸ் - அறிக்கை அண்ணங்கு
3. ஜெயலலிதா - தாவல் திலகம்
4. தேவேகௌடா - சோக சுந்தரர்
5. வாழப்பாடி - பால்வார்க்கும் வள்ளல்
6. குமரி அனந்தன் - ரப்சர் மன்னன்

### ஜாலி போட்டி - 19

**பொருத்தமான பட்டங்கள்:**

1. சுப்ரமணியம் சுவாமி : ..............................
2. ராமதாஸ் : ..............................
3. ஜெயலலிதா : ..............................
4. தேவே கௌடா : ..............................
5. வாழப்பாடி : ..............................
6. குமரி அனந்தன் : ..............................

பெயர்: ..............................

விலாசம் : ..............................

..............................

..............................

குமரி அனந்தன், ஸ்தாபன காங்கிரஸ் கட்சியில் இருந்தாலும் சரி, அல்லது, புதிய காங்கிரஸ், ஒன்று பட்ட காங்கிரஸ், ஜனதா அல்லது தனிக்கட்சி கண்டாலும் சரி, அவரது அலுவலகத்தில், ஓடியாடி உழைத்துக் கொண்டிருக்கும் சற்று குண்டான அகத்தியர் ஒருவரை கட்சிக்காரர்களும், பத்திரிகையாளர்களும் நன்கு அறிவார்கள். அவர் பெயர் தான் ஆம்பல் ராமையன். கடந்த இருபது வருடங்களாக அனந்தனின் நம்பிக்கைக்கு உரியவராகச் செயல்பட்டு வரும் அவரது உதவியாளர். செல்லமாக 'ஆம்பல்'.

தஞ்சை-பட்டுக்கோட்டை பாதையில் 35வது கி.மீ.யில் இருப்பது தான் ஆம்பலாப்பட்டு.. பொதுவாகவே கிழக்குத் தஞ்சை (இப்போது காயிதே மில்லத்) மாவட்டத்தில், கம்யூனிஸ்ட் கட்சியின் பிடிப்பு அதிகம். மிராகதாரர்கள், பண்ணையாளர்கள் ஆகியோரை எதிர்த்து விவசாயத் தொழிலாளர்களின் போராட்டங்கள் அடிக்கடி நடக்கும் பகுதி..

"1954ல் நான் பிறந்த சில மாதங்களுக்கு முன்பு தான், நிலப்பறிப்பு போராட்டம் என்ற

# அனந்

ஒன்று பெரிய அளவில் நடந்து. அந்தச் சின்ன கிராமத்தில் துப்பாக்கிச் சூடு வரை நிலைமை போய்விட்டது. எங்கள் ஊரில், திண்ணையிலும், சாவடியிலும், பொது இடங்களிலும், அரசியல் பேச்சுதான். அதனால் சிறிய வயதிலேயே கம்யூனிஸ்ட் தத்துவங்கள் மனத்தில் படிந்து விட்டன. இருந்தாலும் அப்பா ரங்கசாமி வாண்டையார் பழுத்த காங்கிரஸ் காரர். என்னை தேசிய இயக்கத்தில் இழுத்து, காங்கிரஸுடன் ஒன்றிப் போகச் செய்தவர் ஆம்பலாப்பட்டு கப்பையா. 1962ல் எட்டு வயதிலேயே, காங்கிரஸ் மேடைகளில் பேசத் துவங்கி விட்டேன்" என்று நினைவுகளை மலர்ந்தார் ராமையன்.

ஊருக்கு ஊர் மேடைக்கு மேடை, அந்தக் கால கட்டத்தில், தி.மு.கவினர் கலக்கிக் கொண்டிருந்த நேரம். மக்களைக் கவரும் விதத்தில் பேச்சுக் கலையை ஒரு தொழிலாகவே தி.மு.கவினர் செய்து கொண்டிருந்த போது, 'காங்கிரஸில் அதுபோல் பேச யாரும்

இல்லையே' என்று தொண்டர்கள் வருத்தப் பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்த அனந்தனின் இலக்கியம் கலந்த அரசியல் பேச்சு, ஒரு புதிய எழுச்சியை உண்டாக்கி, தொண்டர்களைக் கவர்ந்தது.

"தஞ்சை-திருச்சி மாவட்டங்களில் அனந்தன் எங்கு பேசினாலும் அங்கு சென்று அவரது பேச்சைக் கேட்பதை வாடிக்கையாகக் கொண்டிருந்தார் ராமையன்.

"1968-ல் எங்கள் ஊருக்குப் பக்கத்தில் பாப்ப நாட்டில், தலைவர் (அனந்தன்) அவர் களுடன் ஒரே மேடையில் பேசும் வாய்ப்பு கிடைத்தது. அது முதல் ஒரு தொடர்பு ஏற் பட்டு அடுத்த பத்தாண்டு காலம் சென்னை மற்றும், மதுரைக்குச் சென்று அடிக்கடி அவரை பார்த்துவிட்டு வந்து கொண்டிருந் தேன். 1977ல் அவர் பாராளுமன்ற உறுப்பின ராக இருந்தபோது, நிரந்தரமாகவே அவரிடம் உதவியாளராகச் சேர்ந்து விட்டேன்" என் கிறார் ராமையன்.

ஒருமுறை விவசாயிகள் போராட்டத்தின் போது ராமையாவைக் கைது செய்து கொண்டு போய் விட்டார்கள். அவரின் உருவத்தையும், அரை டிராயரையும் பார்த்த மன்னார்குடி மாஜிஸ்திரேட் 'வேலூரில் உள்ள சிறுவர்கள்

# னுக்காக மலரும் ஆம்பல்!

சிறைக்கு அழைத்துப் போங்கள்' என்று கூறி விடவே வருத்தமாகப் போய்விட்டது ராமையனுக்கு. உடன் கைதாகி இருந்த மன்னை அம்பிகாபதி, புதிய வேட்டி ஒன்றை வாங்கித் தந்து அவரைக் கட்டிக் கொள்ளச் செய்ய 'பெரிய மனிதனாக'க் . கருதப்பட்டு திருச்சி சிறைச்சாலைக்கு கொண்டு செல்லப்பட்டாராம் ஆம்பல் ராமை யன். "ஆக நான் முதலில் வேட்டி கட்டியது கோர்ட்டில்தான்!" என்று சொல்லிச் சிரிக் கிறார் ராமையன்.

ஆர்வம் காரணமாக தபாலில் தமிழ் இலக்கியம் பட்டப் படிப்பு முடித்திருக்கிறார். அனந்தனின் கையெழுத்து படிக்க மிகச் சிரமமாக இருக்கும். அதை நன்றாக எழுதி, டைப் அடிக்கக் கொடுப்பவர் ராமையன்தான். தவிர, கட்சித் தொண்டர்களுடன், தலைவர் களுடன், ஒருங்கிணைந்து வேலை செய்வது, பத்திரிகையாளர் சந்திப்பு ஏற்பாடு செய்வது ஆம்பல்தான். ரகசியமாகச் செய்ய வேண்டிய அரசியல் வேலைகளையும் தமது சில சொந்த வேலைகளையும் அனந்தன் இவரிடம் கொடுப் பதுண்டு.

"தலைவருக்குக் கொஞ்சம் கடுகடுப்பு அதிகம்தான்! ஆனாலும் எனக்கு அது பழகிப் போய்விட்டது. கோபம் இருக்கும் இடத்தில் தானே குணமும் இருக்கும். கா.கா.தே.கா கட்சியைத் தலைவர் நடத்திக் கொண்டிருந்த போது ஒரு கிறிஸ்துமஸ் அன்று, நான் பணம் இல்லாததால் காலையிலிருந்தே பட்டினியாக இருந்தேன். இரவு கிட்டத்தட்ட பதினோரு மணி அளவில் போனில் விசாரித்த தலைவர் என் குரலில் இருந்த பலவீனத்தைக் கண்டு 'என்னப்பா ஒண்ணும் சாப்பிடலையா?' என்று பரிவாகக் கேட்டதோடு மட்டுமல்லாமல் அடுத்த ஒரு மணி நேரத்தில் அரை டஜன் தோசைகளை கடச் கடச் செய்து எடுத்துக் கொண்டு வந்து என்னைச் சாப்பிட வைத்தார்" என்று நெகிழ்ச்சியோடு சொல் கிறார் ஆம்பல் ராமையன்.

ராமையனுக்கு மனைவியும் ஒரு குழந்தையும் உண்டு. ஊரில் இருக்கும் அவர்களை இரண்டு, மூன்று மாதங்களுக்கு ஒருமுறை சென்று பார்த்து வருகிறார். இவருக்கு ஏதாவது பணத்தேவை என்றால் கவனித்துக் கொள்பவர் அனந்தனின் சகோதரர் வசந்த். ஊரில் நிலம், தோப்பு என்று கொஞ்சம் இருப்பதால் குடும்பத்துக்கும் அவ்வளவாகப் பிரச்னை இல்லை.

"நிறைய நண்பர்கள் 'உனக்குச் சம்பளம் உண்டா?' என்றெல்லாம் கேட்பார்கள். நான் உதவியாளனாக மட்டும் செயல்படாமல் ஒரு கட்சிக்காரனாகவும் இருக்கிறேன். அதை உணர்ந்துதானோ என்னவோ, எனக்கு கட்சிப் பொறுப்புகளையும் தலைவர் கொடுப்பார். தலைவர் சேவையிலேயே காலத்தைக் கழிப்பதுதான் என் எதிர்காலத் திட்டம்" என்று முடிக்கிறார் ஆம்பல் ராமையன்.

- ப்ரியன்

படம்: பேஜர் கே. மூர்த்தி.

**ந**ண்பர் மதனகோபாலின் வாயைக் கிளற வேண்டுமானால் ரம்மிதான் சிறந்த வழி. வழக்கறிஞரான அவரிடமிருந்து ஒரு நல்ல உண்மைக் கதை கிடைக்க பாயிண்டுக்கு பைசா வீதம் பத்தோ இருபதோ ரூபாய்களை இழப்பது லாபம்தான் என்பது என் முடிவு. குறிப்பாக சனிக்கிழமை பிற்பகலில் அவருக்கு ஜாலியான மூட் வரும். ஒரு குட்டித் தூக்கம் போட்டு எழுந்து கிளப்புக்கு வந்து விட்டால் இரவு ஒன்பது மணி வரை கூட கச்சேரி நடக்கும். கதை சொன்ன படியே ஆடுவதில் அவர் நிபுணர். கதை கேட்கும் ஆர்வத்தில் ஆட்டமிழப்பதில் நான் நிபுணன்.

"அண்ணா பிறந்தநாள் அது இதுன்னு சொல்லி ஆயுள் கைதிகளைக் கூட விடுதலை செய்துடறாங்க; அதனால் என்னவெல்லாம் விபரீதம் நடக்கக் கூடும்னு யோசிக்கிறாங்க இல்லே" என்று காலைப் பத்திரிகைச் செய்தி ஒன்றை அவர் ஞாபகப் படுத்தியதுமே, 'சரி இன்று ஒரு நல்ல கதை கிடைக்கும்' என்றுதான் முடிவுக்கு வந்தேன்.

"ஆமாமாம் ஆயுள் கைதின்னு பேருதான். எட்டு, பத்து வருஷத்திலே வெளியிலே வந்துடறானுங்க" என்று நான் தூண்டில் போட,

"மாரிமுத்து அதற்கு ஒரு நல்ல காரணம்" என்று கதையை ஆரம்பித்தார் மதன கோபால்.

"**இ**வ்வளவு நல்லவனா இருக்கிற நீ இங்க எப்படிடா வந்து சேர்ந்தே?" என்று கூட ஜெயில் சூப்பரின்டென்டெண்ட் மாரிமுத்துவைக் கேட்டதுண்டு.

"உணர்ச்சிவசப்பட்டுப் போன மனசு சட்டுன்னு விகாரமாயிடும் ஸார். அப்ப புத்தியும் தடுமாறும். என்ன செய்யறோம்னே தெரியாது. மறுபடி அறிவு தன்னிலைக்கு வருவதற்கு முன் நடக்கக்கூடாதது நடந்து முடிஞ்சிருக்கும்."

"இந்த மனோதத்துவத்தை நீதிபதிகிட்டல்ல சொல்லியிருக்கணும்" என்றார் சிறை அதிகாரி.

"சொல்லிப் பார்த்து எடுபடாமல் போனதால்தானே இங்க வந்திருக்கேன்" என்ற மாரி, தன் கொட்டடியில், சுவரில் சாய்ந்து கண்களை மூடினான்.

அம்மணியின் அழகான முகமும் வாளிப்பான உடல்கட்டும் அவன் மனக் கண்முன் தெரிந்தது. கும்மிருட்டில் பளிச்சிடும் மின்மினி போல் அவள் கரிய உடல்வாகிலும் ஒரு ஜொலிப்பு. கருங்காலி மரத்தில் செதுக்கிய சிற்பம் போல, பார்க்க விண்ணென்று உறுதியாக இருப்பாள். ஆனால் அவளைத் தொட்டாலோ, கரிசல் பூமியில் அவன் விளைவிக்கிற பஞ்சின் மிருதுத்தன்மை. சர்க்கரைப் பொங்கலுக்கு அவன் வெல்லம் காய்ச்சும் போது உருவாகும் பாகு போல நெகிழ்ந்து கொடுப்



## கி. ராஜேந்திரன்

பான். நினைக்கும்போதே இனிமை. ஆனந்தமான இல்லறத்தைக் கடைந்தெடுத்ததில் திரண்ட பொக்கிஷம் அமுதா. துருதுரு கண்களும், கொழு கொழு உடம்பும், இரட்டைப் பின்னலும், பட்டணத்து கவுனுமாக, பட்டாம்பூச்சி போல் வளைய வருவாள். கல்யாணமாகி பத்து வருஷங்கள் ஒரே பரவசம் தான். அந்த இனிய இல்லறத்தில் விஷத்தை விதைத்தவன் சவுரி. பட்டாளத்தில் சேர்ந்து இரண்டு பதக்கங்களும் பெட்டி நிறைய பணமும் போதாக்குறைக்கு பென்ஷனும் பெற்றுத் திரும்பியவன்.

பூர்வீகமாக சவுரிக்குக் கொஞ்சம் நிலமும் ஒரு வீடும் இருந்தது. அப்பனுக்கு ஓய்வு கொடுத்து இனி தானே பயிர் வைப்பதாகப் பொறுப்பு ஏற்றான். கிராமமே பட்டாளத்துக்காரரை ஒரு மரியாதையோடு பார்த்தது. அதை மேலும் வளர்த்துக் கொள்ள இன்னும் பட்டாளத்துக் கதைகள் நிறையச் சொல்லுவான். பாகிஸ்தானுக்குச் சொந்தமான அமெரிக்கப் பாட்டன் டாங்குகளைத் தான் துவம்சம் செய்த விதத்தை அவன் விளக்கும்போது, கிராமத்தில் எல்லோருமே வாய் பிளப்பார்கள் என்றால் அம்மணி சிலிர்த்துப் போனாள். அவனும் அவளுடைய அழகைக் குறிவைத்தே கதைகள் சொன்னான். தனது வீரப் பிரதாபங்களில் அவள் சொக்குவதைக் கவனித்தான்.

கிராமத்துப் பெண்களுக்கு வயல்வெளிகளில் ஆண்டு முழுவதும் வேலை இருக்காது. ஆண் பிள்ளைகள் எல்லாரும் ஏர்உழப் போன பிறகு, நேரம் பார்த்து மாரியின் வீட்டுக் கதவைத் தட்டுவான் சவுரி. குழந்தை அமுதாவுக்கு சாக்கலேட் தருவான். அவளுடைய எட்டாவது பிறந்த



நாளை நினைவு வைத்திருந்து சலவைக் கல்லால் செய்த தாஜ்மஹால் பொம்மை கொடுத்தான். அம்மணி பெருமைப்பட்டாள். சவுரி வந்து குழந்தையுடன் விளையாடி விட்டுப் போனதை மாலையில் மாரியிடம் சொல்லுவான். சில தினங்களில் சொல்ல மறந்தும் போனான்.

அமுதாவை ஒரு கவசமாக அம்மணி பயன்படுத்துவதைப் புரிந்து கொண்டான் சவுரி. 'பொட்டைப் புள்ளைக்குப் படிப்பு எதுக்கு?' என்று அவன் கேட்டதற்கு, காலம் மாறி வருவதை விளக்கி, மகளைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பச் செய்தான்.

அக்கம் பக்கத்து வீட்டுப் பெண்களுக்கு ஜன்னல்களே பைனாகுலர்களாக மாறின. அரசல்புரசலாகப் பேச்சு அடிபடத் தொடங்கியது. இனியும் தாமதித்தால், தான் விரித்த வலையில் ஓட்டை விழ, ஒரு தங்கமீன் தப்பி விடும் என்ற முடிவுக்கு வந்தான் சவுரி. அதே நேரத்தில் மாரியும் வதந்திகள் காதில் விழ கோபாவேசமானான்.

திட்டமிட்டு அன்று மதியம் அவன் வீட்டுக்குத் திரும்பியபோது சவுரி எல்லை மீறி நடந்து கொள்ள, அம்மணி பதறி விலக, மாரியின் அரிவாள் வீச்சு பின்புறமிருந்து சவுரியின் வலது தோளைத் தாக்கியது. சுவரில் குருதிச் சிதறலில் நவீன ஓவியம் படர்ந்தது. பட்டாளத்தில் சேர்ந்து கடுமையான யுத்தங்களுக்கு மத்தியில் வீரசாகசங்கள் புரிந்தும் கூட அங்கம் ஏதும் இழக்காமல் வந்து சேர்ந்த சவுரியின் வலது கை இப்போது துண்டிக்கப்பட்டுத் தொங்கியது. ஆஸ்பத்திரியில் அதைச் செப்பனிட முடியாது என்று முழுதுமாக வெட்டி எடுத்து விட்டார்கள்.

போலீஸாரிடம் அவன் கொடுத்த வாக்குமூலத்தில், தன் மனம் விகாரப்பட்டுப் போயிருந்தாலும் தப்பு ஏதும் நடந்து விடவில்லை என்று சத்தியம் செய்தும் யாரும் நம்பவில்லை. கொஞ்சகாலமாகவே சவுரிக்கும் அம்மணிக்கும் இடையே தொடர்பு இருந்து வந்ததாக வழக்கு ஜோடிக்கப்பட்டது. கிராமத்துப் பெண்கள் சிலரது வக்கிரமான சந்தோஷத்தை உள்ளடக்கிய வெளிப்படையான பரிதாபசாட்சியங்கள் வழக்குக்கு வலுசேர்த்தன. அம்மணியின் அழுகையை யாரும் லட்சியம் செய்யவே இல்லை.

'உணர்ச்சிவசப்பட்டு நடந்த தாக்குதல், திட்டமிடாமல் செய்தது' என்ற எதிர்வாதம் செல்லுபடியாகவில்லை. 'பல நாட்களாகவே ஊர் வாயை மூட முடியாமல் மாரி உள்ளுக்குள் குமைந்திருக்கிறான்' என்று வாதாடப்பட்டது. மாஜிஸ்திரேட் கொடுத்த ஆயுள் தண்டனை செஷன்ஸில் உறுதிசெய்யப்பட்டது.

"நானும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தேன்; பிரயோஜனப்படவில்லை. நல்ல வேளை, சவுரி ஒரு கை இழந்தாலும் உயிர் பிழைச்சுட்டான். செத்துத் தொலைச்சிருந்தால் மாரிக்குத் தூக்குத் தண்டனையே கிடைச்சிருக்கலாம்'' என்று முடித்தார் மதனகோபால். "நன்னடத்தை மூலம் தண்டனை குறைய வாய்ப்பு இருக்கு என்று மாரிக்கு புத்தி சொல்லிவிட்டு வந்தேன்'' என்றார்.

"தண்டனை குறைஞ்சது மட்டுமா, முன்னாள் முதல்வர் 'ஜெ'யின் பிறந்த நாளையொட்டி விடுதலையே கிடைச்சுடுத்தே. அப்புறம் என்ன நடந்தது; அதைச் சொல்லுங்க'' என்றேன்.

"காண்டீன்ல என்ன டிபன்?'' என்று கேட்டார் மதனகோபால்.

காசி அல்வாவும் ரவா கிச்சடியும் நாலு செட் வரவழைத்தேன். கிளப் காண்டீன் காப்பி நிஜமாகவே 'டாப்'பாக இருக்கும். ஃபைவ் ஸ்டார் ஓட்டல் காப்பி கூட இதனோடு ஒப்பிட கஷாயம்தான். மதனகோபால் நல்ல ரசிகர். டிபனை ருசித்துச் சாப்பிட்டு முடிக்கும் வரை கதையைத் தொடர மாட்டார்; சீட்டுக் கலைக்கவும் மாட்டார்.

"எட்டு வருஷம் மாரி கல்லுடைத்தான்'' என்று மதனகோபால் தாமே மறுபடி ஆரம்பித்தார்.

இரண்டு வருஷம் வார்டனாகக் கூட இருந்தான் மாரி. 'அம்மணி தப்பாக நடந்து கொள்ளவில்லை; சவுரியும் அவளும் கூறியது

உண்மைதான்' என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. அதுதான் சிறைவாசத்தை ஒரு எதிர் பார்ப்புடன் ஏற்க உதவியது. அம்மணியை நினைத்து நினைத்து ஏங்கினான். 'அவளுக்கு இப்போ முப்பத்தெட்டு வயசு இருக்குமா? ஓரிரு நரை மயிர் தோன்றியிருக்கலாம். கண்களின் ஓரத்தில் கோடுகள் விழ ஆரம்பித்திருக்கலாம். ஆனாலும் என்ன? இன்னமும் அவள் 'அள்ளிக் கொள்ளத் தூண்டும் அழகுப் பதுமைதான்' என்ற எண்ணத்தோடு ஆசை ஆசையாக கிராமத்துக்கு மாரி திரும்பினான்.

வீட்டுக் கதவைத் திறந்த அம்மணியைப் பார்த்துத் திகைத்து விட்டான். அவன் எதிர் பார்த்ததை விட இளமையாக, அழகு நந்தவனமாக விளங்கியது... அம்மணியா இது...? இல்லை! இல்லை! இது அமுதா! தன் மகள் அமுதா!

பாசத்துடன் அவளைக் கட்டி அணைக்க தன் கரங்களை நீட்டினான். அவளோ அவற்றைத் தட்டி விடாத குறையாக விலகினாள். அனலான சொற்களை அவன் மீது வீசினாள்.

"எதுக்கு இங்க வந்தீங்க? விடுதலை கிடைச்சாலும் வேற எங்கேயும் போய்த் தொலையறதுதானே" என்றாள்.

இவன் திகைத்துப் போய் நின்றான். அவளோ கண்ணீர் விட்டபடியே கோபத்தோடு தொடர்ந்து பேசினாள் :

'இங்க உங்களுக்கு என்ன இருக்கு? அம்மா மீது விபசாரின்னு பழிசுமத்திட்டு நீங்க ஜெயிலுக்குப் போயிட்டீங்க. அவமானம் தாங்காம தற்கொலை செய்துக்கிட்டா. என் எதிர்காலம் பற்றி கொஞ்சமும் யோசிக்காம சவுரி அண்ணன் மீது அரிவாளை வீசினீங்களே, அந்தக் கொலை முயற்சியில் நீங்க வெற்றி பெறாமல் போயிருக்கலாம்; ஆனா என் மனசுல இருந்த பாசத்தை அப்பவே கொன்னுட்டீங்க. அதனாலதான் உங்களோட ஒரு கடிதாசுக்குக் கூட நான் பதில் போடலை. என்னை நானே தேத்திக்கிட்டு எப்படியோ படிச்சு, இப்ப மதிய உணவு திட்டத்துல ஆயா வேலை கூட தேடிக்கிட்டிருக்கேன். ஒரு நல்ல மனுஷருக்கு என் கழுத்தை நீட்டவும் தயாரா யிட்டேன். இன்னும் கொஞ்ச நேரத்துல அவர் இங்க வருவாரு. அப்படி அவர் வரும்போது நீங்க இங்க இருக்க வேண்டாம். தயவுசெஞ்சு போயிடுங்க. கம்பி எண்ணிட்டு வந்த உங்களைப் பார்த்தா அவர் மனசு மாறினாலும் மாறிடலாம். போயிடுங்க, சீக்கிரம்!" என்றாள்.

"அமுதா! என்னைப் பாரு! உன் அப்பா இல்லியா நான்? உன் கல்யாணத்தை நான் நடத்தி வைக்கலை. ஒரு ஓரமா ஒதுங்கி இருந்து பார்த்துட்டுப் போயிடறேன்" என்றான்.

"நீங்க இருந்தா கல்யாணமே நடக்காது; போயிடுங்க" என்றாள் மறுபடியும்.



**"எங்களுக்குப் பெண்ணைப் புடிச்சுப் போச்சு... முதல் சண்டைக்கு பொண்ணு ரெடியான்னு கேளுங்க..."**

**- ஜூ. ரவி**

துயரமும் ஏமாற்றமும் போட்டியிட அவன் ஏக்கத்தோடு திரும்பி நடந்தான். ஆனால் கால்கள் மேலும் நகர மறுத்தன. அமுதாவின் கல்யாணத்தைக் கண்குளிரப் பார்க்க முடியாமல் போனாலும் மாப்பிள்ளையையாவது பார்த்து விடலாம் என்று ஒதுங்கி, பதுங்கி நின்றான்.

சற்று நேரத்தில் தோளை மறைத்துத் துண்டு போர்த்தியிருந்த ஒருவன் வந்தான். அவனைப் பார்த்ததுமே பந்தயக் குதிரை வேகத்தில் மாரியின் இருதயம் அடித்துக் கொண்டது. கதவு திறந்தது. சிரித்த முகத்துடன் அம்மணி நின்றிருந்தாள். அவளை மிச்சமிருந்த கையால் சவுரி அணைத்துக் கொள்ள இருவரும் ஒன்றாக வீட்டினுள்ளே சென்றார்கள். கதவு மீண்டும் சாத்தப்பட்டது.

மாரியின் தலையில் இடி விழுந்தது போலாயிற்று. அம்மா செத்து விட்டதாக அமுதா சொன்னது திட்டமிட்ட நாடகம். ஜெயிலுக்குப் போன தன்னை மறந்து ஒதுக்கிவிட்டு, சவுரியும் அம்மணியும் இன்பமாக வாழ்கிறார்கள்! இல்லறமே நடத்துகிறார்கள்! ஆத்திரத்தில் அவன் உடல் நடுங்கியது. ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து கதவில் மோதினான். கல் உடைத்து வைரம் பாய்ந்த தோள்கள் தாக்கியதால் கதவு படாரென்று திறந்து கொண்டது. சவுரியின் மீது மின்னலாக இறங்கி தன் வலுவான கரங்களால் அவன் கழுத்தை நெரித்தான். சவுரியின் விழிகள் பிதுங்கின. அம்மணி 'ஓ'வென்று அலற, உள்ளேயிருந்து அமுதா ஓடிவந்து செய்வதறியாது நின்றாள். மாரி மறுபடி கைதாகி, உணர்ச்சி வசப்பட்டுக் கொலை செய்ததாக இம்முறை வழக்கு நடந்து மீண்டும் ஆயுள்தண்டனை பெற்றான்.

கதையை முடித்து விட்டார் மதன

## எறும்பார் கடிக்கிறார்!

**"ஆளும் கட்சியாக வேண்டும் என்பது நமது லட்சியம் அல்ல... மக்களுக்கு உண்மையாகப் பாடுபட வேண்டும் என்பதை நமது கடமையாகக் கொண்டு செயல்பட வேண்டும்!"**

**– போட்டி அ.தி.மு.க. நிர்வாகிகள் கூட்டத்தில் எஸ்.டி.எஸ்**

**"ஆளுங் கட்சிக்கும் மக்கள் பணிக்கும் ரொம்ப தூரம்ங்கறதை அனுபவத்துல தெரிஞ்சு வைச்சிக்கிட்டுப் பேசறார் பாருங்க!"**

---

கோபால்.

"ச்சொ ச்சொ" என்று சூள்கொட்டினேன். "மாரி அருகில் இருந்தவரை அம்மணியால் சவுரியைத் தவிர்க்க முடிந்தது. தப்பு செய்யாமல் தன்னைக் காத்துக் கொள்ளவும் முடிந்தது. ஆனால் மாரி சிறைக்குப் போன பிறகு அவள் மனவலிமையும் போய் விட்டது; அப்படித்தானே?" என்று கேட்டேன்.

"ஆமாம்; எந்த சவுரியைக் காரணமின்றியும் ஆராயாமலும் ஆத்திரப்பட்டு தன் கணவன் வெட்டினானோ, அந்த சவுரியையே வாழ்க்கைத் துணையாக அம்மணி ஏற்றுக் கொண்டாள். கல்யாணம் என்று ஒன்று நடக்காதது தான் குறை. தனிமையில் வாழ்வது கஷ்டம் தானே? அதுவும் ஒரு பெண்ணைப் படிக்க வைத்து, வளர்த்து, கல்யாணம் கட்டிக் கொடுக்க வேண்டிய நிலையில் இருந்தாள் அம்மணி. அமுதாவை அதுவரை தன் நன்னடத்தைக்குக் கவசமாகப் பயன்படுத்தியவள், இப்போது அவளையே தன் முடிவுக்கு ஆதார காரணமாக ஆக்கிக் கொண்டாள்!"

"எல்லாச் சலனங்களும் அடங்கி, வாழ்க்கை அமைதி பெறத் தொடங்கிய நிலையில், மாரி விடுதலை பெற்று வருவதாக செய்தி கிடைத்த போது, திரும்பவும் சிக்கல் ஏற்பட்டது. அதைச் சமாளிக்க அமுதாவையே ஒரு நாடகமாடச் செய்து மாரியைத் திருப்பி அனுப்பிவிட முயற்சி செய்தார்களாக்கும்" என்றேன்.

"ஆமாம், மாரி மட்டும் தன் மாப்பிள்ளையையாவது ஒரு தடவை கண்குளிர பார்த்து விடலாம் என்று ஒளிந்து கொண்டிருக்காவிட்டால் அமுதாவை முன்வைத்து அவர்கள் நடத்திய நாடகம் முழு வெற்றி பெற்றிருக்கும்" என்றார் மதனகோபால். "மாரி ரயிலேறி வடக்கே எங்கேயாவது போயிருப்பான்!"

"அது சரி, ஆனால் மாரி மறுபடி கம்பி எண்ண வேண்டும் என்று அவன் தலையில் எழுதியிருக்கும்போது அதை எப்படி மாற்ற முடியும்?" என்றேன்.

"தனக்கு ஆயுள்தண்டனை வேண்டாம்; தூக்கு தண்டனையே தந்து விடுமாறு நீதிபதியிடம் அவன் கதறியது ரொம்ப உருக்கமாக இருந்தது. ஆனால் நீதிபதி சாட்சியங்களையும் சட்டத்தையும் மதித்துத்தானே தீர்ப்பு வழங்க முடியும்?" என்று பெருமூச்சுடன் முடித்தார் மதனகோபால்.

**அ**ன்றிரவு எனக்குத் தூக்கம் வரவே இல்லை. கதையில் ஏதோ குறை இருப்பதாகத் தோன்றிக் கொண்டே இருந்தது. மறுநாள் காலை மதனகோபாலுக்கு ஃபோன் செய்து, "எல்லாம் சரிதான், ஆனால் அம்மணியும் மாரியும் ஆட்டி வைத்தபடி நாடகம் ஆட அமுதா எப்படி சம்மதித்தாள்?" என்று கேட்டேன்.

"அவளுக்கு வேறு வழி என்ன? பெற்ற அம்மாவையும் கிடைத்த அப்பாவையும் பகைத்துக் கொள்ளவா முடியும்? அந்த நாடகம் வெற்றி பெறாமலிருக்க, 'இப்ப மாப்பிள்ளை வருவார்; வேணுமானால் அந்த மரத்துக்குப் பின்னாடி மறைந்திருந்து பார்த்துட்டுப் போ' என்று சொந்த அப்பாவிடம் ஒரு கூடுதல் டயலாக் மட்டும்தான் பேச முடியும்" என்றார் மதனகோபால்!

---



"ஏன் எல்லோரும் பாதியிலேயே எழுந்து வெளியே போயிடறாங்க?"

"நாம படத்துல ஒரு பெரிய தப்பு பண்ணிட்டோம்!"

"என்ன?"

" 'இடைவேளை' விட்டோமே அதான்!"

**– பெண்ணை சி. முருகன்**

"ஏலேய், இன்னும் எதுக்கு நிக்கறே?"

குவளையிலிருந்து டீயை 'சர்'ரென்று ஊற்றியபடி கேட்டார் அண்ணாமலை.

ராசு, வறண்டு போன உதட்டை நாக்கால் தடவிவிட்டபடி அந்தரத்தில் அருவி போலத் தோன்றி மறையும் 'டீ'யை ஏக்கத்தோடு பார்த்தான்.

"நாளைக்குத் தந்துடறேண்ணே. பசிக்குது."

கோகோ கோலாவை பாட்டிலைச் சாய்த்து உள்ளே அனுப்பிக் கொண்டிருந்த ஆள் ராசுவையும், அண்ணாமலையையும் வேடிக்கை பார்த்தான்.

'டீ, காப்பி, கூல்ட்ரிங்ஸ் இவ்விடம் கிடைக்கும்' என்று சாக்பீஸால் எழுதப்பட்டிருந்த சிறிய போர்டு காற்றில் ஆடியது.

"இவ்வளவு கெஞ்சறானே, கொடுத்துத் தொலையுங்களேன்."

கோகோ கோலா, ராசுவின் சிபாரிசுக்கு வந்தான்.

"காசு வராதுங்க. வெட்டிப்பய இவன். நான் என்ன இங்கே தர்மசத்திரமா நடத்தறேன்?"

பெஞ்சில் அமர்ந்திருந்த மூன்று பேரிடம் டீ கிளாசை நீட்டியபடி கேட்டார் அண்ணாமலை.

டீ குடிப்பவர்கள் ராசுவின் பார்வைபட்டு சங்கடமாய் நெளிந்தனர்.

காசு கொடுத்துவிட்டு, கோகோகோலா, ஸ்கூட்டரில் பறந்ததும், அண்ணாமலை எச்சிலைத் துப்பினார்.



# முக்கடை ஞானம்

"வந்துட்டான் சிபாரிசுக்கு. ஏன், தன் காசைக் கொடுத்து டீ வாங்கித் தர்றது? துரை மாதிரி உடையையும், கூலிங்கிளாசையும் பாரு."

வடிகட்டி வழியே வெந்நீரை ஊற்றி, டீ தண்ணியை இறக்கினார்.

"எலேய், இன்னும் ஏண்டா இங்கேயே நிக்கறே. போ, போ. இல்லாட்டி வெந்நீரை மேலே ஊத்திப்புடுவேன்."

வேறு வழியின்றி ராசு நகர்ந்தான். வயிறு பகபகவென்று இரைந்தது. காலையிலிருந்தே உடம்பு முழுதும் அடித்துப் போட்டாற்போல வலிக்கிறது. காய்ச்சல் வந்து விடுமோ என்று பயமாயிருந்தது அவனுக்கு.

குடிசைக்குத் திரும்பினான். அம்மா வயல் வேலைக்குப் போயிருக்கும். பழைய சோற்றுத் தண்ணி மட்டும் சின்ன எவர்சில்வர் பாத்திரத்தில் மீதமிருந்தது.

நெஞ்சில் சளி. இருமி, இருமி தொண்டைப் புண் வேறு. சூடாய் ஏதாவது குடித்தால் இதமாயிருக்கும். ஹூம்! வழியில்லையே!

மண்தரையில் படுத்தான். கண்கள் செருகிக் கொண்டன.

ஒரு வாரம் பாடாய்ப்படுத்திய பிறகுதான் காய்ச்சல் விட்டது.

அம்மாதான் பாவம், மிகவும் கஷ்டப்பட்டு விட்டாள்.

அரசு மருத்துவமனைக்கு ரிக்ஷாவில் கூட்டிப் போய், கஞ்சி வைத்துக் கொடுத்து, வேலைக்கும் போய், ப்ச்! உடம்பு சரியானதும் ஏதாவது ஒரு வேலையில் போய் ஒட்டிக் கொண்டேயாக வேண்டும்.

யோசித்தபடி குடிசையை விட்டு வெளியே வந்தான்.

பத்தடி நடந்தால் மெயின் ரோடு. இவன் மெயின் ரோடுக்கு வரவும், அருகில் கார் வந்து நிற்கவும் சரியாயிருந்தது.

வெள்ளை அம்பாசிடர் கார். முன் சீட்டி லிருந்து ஓர் ஆள் இறங்கி வந்தான்.

"முனியம்மா வீடு இங்கே எதுப்பா?"

காருக்குள் எம்.எல்.ஏ. மனைவி உட்கார்ந் திருப்பது கண்டான் ராசு.

இரண்டு மாதம் முன்பு நடந்த எலெக் ஷனில் இந்தம்மா முழு மூச்சாய் இறங்கி எல்லா குடிசைக்குள்ளும் வந்து வோட்டு கேட்டது நினைவுக்கு வந்தது.

"அவ புருஷன் கூட பத்து நாள் முன்னாடி இறந்துட்டாரே... முனியம்மா வீடு..."

"ஓ, அந்தம்மாவா? இப்ப அது அதோட அண்ணன் வீட்டுல இருக்குது. நேத்துதான் போச்சு."

பெரிய குரலில் அழுதபடி நேற்று காலை யில் அந்த இடத்தையே கலக்கிவிட்டாள் முனி யம்மா.

"அம்மா பார்க்கணும்னு வந்திருக்காங்க. உனக்கு இடம் தெரியுமா?"

தலையாட்டினான் ராசு.

"அப்ப வண்டியிலே ஏறு."

முன்சீட்டில் இவனையும் ஏற்றிக்கொண்டு புறப்பட்டது கார்.

"நரியன் தெருவுலதான் இருக்காரு, அதோட அண்ணன். சீனிவாச நகர் தாண்டிப் போக ணும்."

ராசு வழியைச் சொல்லும்போதே எம்.எல்.ஏ. மனைவி காரை நிறுத்தச் சொன்னாள்.

"தாகமாயிருக்கு, அந்தக் கடையிலே 'ஜில்லு'னு ஏதாவது கிடைக்குமான்னு பாரு."

ராசு திரும்பிப் பார்த்தான்.

"அட, நம்ம அண்ணாமலை கடை. நான் போய் வாங்கிட்டு வரேம்மா."

இருபது ரூபாயை வாங்கிக் கொண்டு ராசு காரை விட்டு இறங்கினான்.

ராசுவை எதிர்பார்க்காத அண்ணாமலை திகைத்தான்.

"என்னப்பா தடாபுடலாய் வந்து இறங்கறே? ஒரு வாரமாய் ஆளையே காணோம்?"

"ஸ், சட்டுனு ஒரு பாட்டிலை ஃப்ரிஜ்ஜி லிருந்து எடுங்க. அம்மா 'வெயிட்' பண்றாங்க."

குரலில் அவனையறியாமல் ஒரு விரட்டல் தொனி வெளிப்பட்டது ராசுவிடமிருந்து.

குடித்து முடித்ததும் கார் புறப்பட்டது.

"பரவாயில்லை, மிச்ச பணத்தை நீயே வைச்சுக்கப்பா. டிரைவர் கொஞ்சம் சீக்கிரம் போப்பா."

கார் சவாரி புதிது ராசுவுக்கு. உள்ளுக்குள் மெல்லிய குரலில் வெளிப்பட்ட சினிமா பாட்டுக்குத் தாளம் போடத் தோன்றியது. அடக்கிக் கொண்டான்.

**கிருஷ்ணா**





"நீங்களே நேரிலே வரணுமாம்மா?"

ராசுவின் பக்கத்திலிருந்த ஆள் தலையைத் திருப்பிக் கேட்டான்.

"நம்ம வீட்டுலே பத்து வருஷமா வேலை செய்யறவ. தாலி துக்கம் வேற. பாவம்."

எம்.எல்.ஏ. மனைவி பதில் சொல்லும் போதே இடம் வந்து விட்டது.

குளிர்பானம் போக மிஞ்சிய காசில் குஷியாய் மேட்டினி ஷோ போய்விட்டு மாலையில் திரும்பினான் ராசு.

கையில் இன்னும் மூன்று ரூபாய் இருந்தது.

அண்ணாமலையின் டீக்கடைக்குள் நுழைந்தான்.

ஜம்பமாய் பெஞ்சில் அமர்ந்தான். எல்லாம் காசு கொடுத்த தைரியம்.

"ஸ்ட்ராங் டீ!"

அண்ணாமலையின் திடீர் பவ்யம் கண்டு திகைத்தான்.

"என்னப்பா ராசு, பெரிய ஆளாயிட்டே போலிருக்கு?"

ராசுவுக்கு அவர் கேள்வி புரியவில்லை.

குழப்பமாய் பார்த்தபடி பையைத் துழாவி னான். ஐயோ!

காசு என்னாயிற்று? ஓ, சட்டைப்பை ஓட்டை! இப்போது காசுக்கு என்ன பதில் சொல்வது?

"பழைய ராசுன்னு நினைச்சிடாதீங்க இவனை! புளியங்கொம்பாய்ப் புடிச்சிட்டான்."

ராசுவின் பெருமையை விஸ்தாரமாய் ஊதினார் அண்ணாமலை.

"அண்ணே, காசு..."

"அட, காசு இருக்கட்டும்பா. அது எப்படி ஒரே வாரத்துல உள்ளே புகுந்துட்டே?"

"எங்கேண்ணே?"

"எம்.எல்.ஏ. வீட்டுக்குள்ளேதான். ஒரு வாரமாய் உன்னைக் காணோமேன்னு பார்த் தால், திடீர்னு காரில் வந்து இறங்கறே. உன்னை என்னமோன்னு நினைச்சது தப்பு. தம்பியை சாதாரணமாய் எடை போட்டுடாதீங்க..."

'டீ' குடித்துக் கொண்டிருந்த கஸ்டமரிடம் அண்ணாமலை அள்ளி விட ஆரம்பிக்க, ராசுவின் மூளைக்குள் ஏகப்பட்ட மின்னல்கள்.

திகைப்புடன் அண்ணாமலையின் பேச்சை கேட்டுக் கொண்டிருந்தவன் முகத்தில், பளீர் வெளிச்சம்.

எழுந்தான் ராசு.

"எங்கேப்பா கிளம்பிட்டே?"

"எம்.எல்.ஏ. வீட்டுக்கு" என்றபடி நடக்க ஆரம்பித்தான்.

எப்படியாவது அரசியல் வட்டத்துக்குள் புகுந்துவிட வேண்டும் என்ற வைராக்கியம் அவன் நடையில் தெரிந்தது.

# தாஜ்மஹாலைச் சுத்தப்படுத்த முடியுமா?

"தாஜ்மஹாலை சுத்தப்படுத்த சரியான வழிமுறை என்னிடம் இருக்கிறது" என்று சமீபத்தில் அறிவித்திருக்கிறார் டெல்லியைச் சேர்ந்த சரூப் ஜெயின் என்பவர். இந்திய தொல்பொருள் ஆராய்ச்சி நிலையத்தால் கூட போதிய அளவு வெற்றி பெற முடியாத இந்த விஷயத்துக்குத் தம்மால் தீர்வு காண முடியும் என்று நம்புகிறார்.

சில ஆண்டுகளுக்கு முன் ஆக்ராவுக்குச் சென்று அந்த சலவைக் கல் அதிசயத்தைப் பார்த்தபோது நம் மனத்தில் ஒரு கேள்வி எழுந்தது. "நாம் வெள்ளைச் சட்டையை ஓரிரு நாட்களுக்கு மேல் அணிய முடிவதில்லை. காரணம் அதில் ஏதாவது அழுக்குப் பட்டால் பளிச்சென்று தெரிவதுதான். அப்படி இருக்க இந்தத் தாஜ்மஹாலை எப்படிச் சுத்தப்படுத்துகிறார்கள்? பலப்பல ஆண்டுகளாக வெண்மை கெடாமல் பாதுகாக்கிறார்கள்?"

இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிப் பிரிவினர்தான் இந்தச் சுத்தப்படுத்தும் வேலைக்குப் பொறுப்பு இந்தப் பணிப்பிரிவின் சீஃப் அனலிஸ்ட் மற்றும் உதவி மேற்பார்வையாளர் ஆகியோரை விளக்கம் கேட்டோம்.

தாஜ்மஹால், மக்ரானா என்ற சலவைக்கல் வகையினால் கட்டப்பட்டுள்ளது. இது உறுதியான உயர் வகை சலவைக்கல். இந்தக் கல்லை எந்த ரசாயனப் பொருளும், கலபத்தில் ஊடுருவிச் செல்ல முடியாது. இதன் காரணமாக எந்த வகை அழுக்கும் தாஜ்மஹாலின் மேல்பகுதியில் மட்டும்தான் படுகிறது.

இந்த அழுக்குப் படலத்தைக் களைய இப்போது பயன்படுத்தப்படும் முறை இதுதான். களிமண்ணைக் குழைத்து அதன் மேல் பூசிவிட்டு, இருபத்திநாலு மணி நேரம் காயவைக்கிறார்கள். மெக்னிஷியம், அலுமினியம் சிலிகேட் என்ற இந்தக் களிமண்ணுக்கு உறிஞ்சும் திறன் அதிகம். கட்டடத்தின் மீது ஒட்டிக் கொண்டிருக்கும் அழுக்கை இது இழுத்துக் கொண்டு விடுகிறது. காய்ந்த பிறகு, வடிகட்டிய நீரால் சுத்தப்படுத்துகிறார்கள்.

தாஜ்மஹாலின் தெற்குப் பகுதியை சுத்தம் செய்வதுதான் பெரிய சவாலாம். அங்குதான் பொது மக்கள் வரும் முகப்புப் பாதை இருக்கிறது. தினமும் ஆயிரக்கணக்கில் மக்கள் வருகிறார்கள். ஆர்வமிகுதியில் கட்டடத்தைத் தொடுகிறார்கள். வழிகாட்டிகள் வேறு அங்கங்கே கட்டடத்தை தட்டிக் காட்டுகிறார்கள். இதனாலெல்லாம் பிசுக்கு, அழுக்கு, சொரசொரப்பு ஆகியவை உண்டாகின்றன.

இவற்றின் காரணமாக கடந்த பல மாதங்களாக, தாஜ்மஹாலுக்குள் மக்களை அனுமதிப்பதில்லை.

கட்டடத்தில் மாசுபடுவதைத் தவிர்க்க வேதியல் முறைப்படி எந்தவித நிரந்தர நடவடிக்கையையும் எடுக்க முடியாததாலோ என்னவோ, சமீபகாலமாக தாஜ்மஹாலின் நிறம் சற்று மங்கலாகி வருவதாக சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

இந்த நிலையில் சரூப் ஜெயினின் அறிவிப்பு உண்மையாக இருந்தால் "அது ஒரு மிகப் பெரிய வரப்பிரசாதம். காரணம், ஒரு கலை பொக்கிஷம் காக்கப்படுகிறது

என்பது மட்டுமல்ல; ஆயிரக்கணக் கானவர்களின் வயிற் றுப்பாட்டுக்கு அது வழி வகுக்கிறது என்பதாலும்தான். எப்படி? இதோ விளக்கம் :

தாஜ்மஹாலின் சிறப்பு பற்றி ஆக்ரா வாசி ஒருவரிடம் நாம் கருத்துக் கேட்ட போது, அவர் கோபத்துடன் "எங்கள் ஊருக்கே அது ஒரு சிறப்பு என்று நான் சொல் வேன் என எதிர்பார்த்தீர்களா? என்னைப் பொருத்தவரை ஆக்ராவின் முன்னேற்றத்துக்கு தாஜ்மகால் ஒரு முட்டுக்கட்டை" என்றார். அவரது ஆதங்கத்தின் பின்னணி இதுதான்.

கடந்த பதினைந்து வருடங்களாக எந்த புது தொழிற்சாலையும் ஆக்ராவில் தொடங் கப்படக்கூடாது என்று அரசு உத்தரவிட்டிருக் கிறது. தொழிற்சாலையின் கழிவுப் பொருட் களும், அவற்றிலிருந்து வெளியேறும் நச்சுக்காற் றும் தாஜ்மஹாலை பாதித்து விடுமோ என்ற பயம்தான் காரணம்.

இது மட்டுமல்ல. ஏற்கெனவே ஆக்ராவில் அமைந்துள்ள சில தொழிற்சாலைகளையும் சுமார் ஐம்பது கிலோ மீட்டர் தள்ளியுள்ள வேறு இடத்திற்கு அரசு மாற்றச் சொல்லி யிருக்கிறது. இதனால் தொழிற்சாலைகளை நடத்துபவர்களுக்கு மட்டு மல்ல, அவற்றின் ஊழியர்களுக்கும் நிறைய சிரமங்கள்.

நம்மிடம் இப்படிக் குமுறிய ஆக்ராக்காரரிடம் "இருக்கட்டுமே. எக்கச்சக்கமான சுற்றுலாப் பயணிகள் தாஜ்மஹால் காரணமாக வருவதால் உங்கள் ஊரில் பொருளாதார மேம்பாடு ஏற் படுகிறதே. அதை யோசிக்க வேண்டாமா?" என்றோம்.

"எல்லாப் பயணிகளும் டெல்லியில் தங்கிக் கொண்டு, தாஜ்மஹாலை ஓரிரு மணி நேரம் பார்த்துவிட்டு மீண்டும் தங்குவதற்கு டெல் லிக்கே சென்று விடுகிறார்கள். இவர்களால் ஆக்ராவுக்கென்ன பெரிய பொருளாதார வளர்ச்சி?" என்றார் கோபம் குறையாமல்.



இந்த நிலையில், "என்னைச் செயல்படுத்த விட்டால், தாஜ்மஹாலின் இழந்த பொலிவை மீண்டும் கொண்டு வருவேன். அது மட்டு மல்ல; அதன் அருகில் இருக்கும் தொழிற் சாலைகளை மாற்றவேண்டிய அவசியம் கூட இருக்காது" எனும் சருப் ஜெயின் தமது திட்டம் பற்றிய சூட்சுமத்தை வெளியிட மறுக் கிறார் – ராமர் பிள்ளை மாதிரி!

**- ஜி.எஸ்.எஸ்.**

# ஞானப்பழம்

ஞானப் பழம் என்பது, படத்தில் பாக்யராஜ் நடத்தும் ஒரு பத்திரிகையின் பெயர். அரசியல்வாதிகளின் நிஜ முகங்களைக் காட்டி, வம்பில் மாட்டிக் கொள்கிற ஹீரோ என்பது ஒரு டிராக். நேரம் காலமில்லாமல் பத்திரிகைப் பணி பார்த்துக் கொண்டிருப்பவன், கல்யாணமானால் என்ன பாடு படுவான் என்பதைக் கொஞ்சம் கவிதை கலந்து, சொல்ல முயற்சி செய்கிற இன்னொரு டிராக்.

இரண்டாவதில் இன்னும் சற்று கவனம் செலுத்தியிருந்தால் பாக்யராஜின் டிரேட் மார்க் முத்திரை விழுந்து, படத்தைத் தூக்கி நிறுத்தியிருக்கும்.

அல்லாமல், அரசியல்வாதியின் கொட்டம், தனி மனிதனாக பாக்யராஜின் போராட்டம், நாடகத்தனமான திருப்பங்கள், மசாலா என்பதாகத் தமக்கு அந்நியமான விஷயங்களில் கைவைத்திருக்கிறார் பாக்யராஜ்.

விளைவு?

அவரது மிகப் பெரிய பிளஸ் பாயிண்ட்டான நகைச்சுவை, மருந்துக்குக் கூட இல்லை! கவுண்டமணி இருந்தும் கலகலப்பில்லை.

ஒரே ஒரு இடம் மட்டும் விதிவிலக்கு. தம் பத்திரிகையைத் தாமே பஸ்ஸில் கூவி விற்கிறார் பாக்யராஜ். கூடவே வீரிய லேகியக்காரனின் வியாபாரக் குரலும் ஓவர்-லேப் ஆகிறபோது அங்கே பாக்யராஜ் பிராண்ட் தெரிகிறது.

குறிப்பிட வேண்டிய விஷயம் சுகன்யா வின் நடிப்பு. விருப்பப்பட்டு, பல தகிடுதத் தங்கள் பண்ணி, தாம் காதலித்த பாக்யராஜையே மணக்கிறார். பிறகு ஒரு பத்திரிகையாளனின் மனைவியாக வாழ்வதில் உள்ள நிஜ கஷ்டங்களைத் தாங்க முடியாமல் பிறந்த வீட்டுக்கே போய் விடுவதும் அங்கு போய் ஏங்கி மாய்வதும் வெகு உருக்கம்.

அப்புறம், பாக்யராஜே இசையமைத்திருக்கிற படம் இது. யாருமில்லாத தீவொன்று வேண்டுகிற அந்தப் பாடலில் தொழில்முறைக் கைவண்ணம் தெரிகிறது; ஆச்சர்யம். அதை விட ஆச்சர்யம், அதைப் படமாக்கி இருக்கிற விதம்.

பொதுவாக பாக்யராஜ் படங்களில் தொழில்நுட்ப ரீதியில் காணக்கிடைக்காத நேர்த்தி, இதில் கைவசமாகி இருக்கிறது. தொடர வேண்டும்.

அடுக்கடுக்கான எதிர்பாராத சம்பவங்களால் கதை நகர்த்திப் போவதில் பாக்யராஜுக்கு இணை அவர்தான். ஆனால், இந்தப் படம் ஏனோ ஜவ்வடிக்கிறது. குறிப்பாக, க்ளைமாக்ஸின் அத்தனை அபத்தமான செயற்கைத்தனம், சண்டைகளெல்லாம் பாக்யராஜ்தானா என்று கேட்க வைக்கின்றன.

'இல்லை; வேறொருவர்' என்று தப்பிக்க, டைரக்டராக ஆர்.பி.விஸ்வம் என்று கார்டு காட்டுகிறார்கள்.

ஒரு மியூசுவல் ஏமாற்றம்- பாக்யராஜ் ரசிகர்களுக்கும் பாக்யராஜுக்கும்!

— ஆர்.பி.ஆர்



பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

புதிய

# KKR

இந்தியாவின் முதல் முத்திரைப் பெற்ற பாமாயில்.

## நவீன விஞ்ஞான முறையில் ரிஃபைன்ட் செய்யப்பட்டது

**ஆஹா ! நெய் போன்றது ! நெய்யின் சுவையுடையது !!**
**ஆனா, கொழுப்பும், வாசனையும் கிடையாது.**



கே.கே.ஆர். பாமாயில் அதிக ஊட்டச் சத்து மிக்கது. இதர சமையல் எண்ணெய்களிலிருந்து பல வகையில் மாறுபட்ட தாம் தனித்தன்மை வாய்ந்தது. உயர் தரமான கே.கே.ஆர் பாமாயில் பாம் பழத்திலிருந்து பிழிந்தெடுக்கப்படுகிறது.
• வைட்டமின் A & E அதிக அளவில் நிறைந்துள்ளது • புரதச்சத்துக்கள் நிறைந்துள்ளது • கொலஸ்ட்ராலை கட்டுப்படுத்துகிறது • ஈரலுக்கு நன்மையானது • புற்று நோயை தடுக்கக்கூடியது.




இலவசச் சலுகை சென்னையிலும் அதன் புறநகர் பகுதிகளிலும் முடிவடைந்தது.

* கே. கே. ஆரின் செம் பனை பண்ணையில் இரண்டு யூனிட் (10 சென்ட் ஒரு யூனிட்) வாங்குபவருக்கு, ஒரு வருடத்திற்கு மாதந்தோறும் ஒரு லிட்டர் கே.கே. ஆர் பாமாயில் இலவசமாக வழங்கப்படும்.









KKR

பாம் ஆயில் (இந்தியா) லிட்.,
NO. 121, மாதவரம் நெடுஞ்சாலை (வடக்கு),
பெரம்பூர், சென்னை 600 011, Ph: 5375456, 5376796.

மொத்த விற்பனையாளர்கள் தாலுகா வாரியாக வரவேற்கப்படுகிறார்கள்

ADEPT/KKR/96

**கே.கே.ஆர் பாமாயில், தூய்மை மற்றும் முழு குடும்பத்தின் ஆரோக்கியம்**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

# க்ளினிக் ஆல் க்ளியரின் 2 வார சவால்

## வேறு ஏதாவது ஷாம்பூ, எங்களை விட வேகமாக

## பொடுகைக் கட்டுப்-படுத்த முடியும் என்றால் அதை வாங்குங்கள் !

அதி வேகமாக செயல்படும் ஃபார்முலா கொண்ட புதிய க்ளினிக் ஆல் க்ளியர், பொடுகுக்கு மூல காரணமான மைக்ரோப்ஸை எதிர்க்கும் வகையில் விசேஷமாக வடிவமைக்கப் பட்டுள்ளது. அதே சமயம், இதில் உள்ள வளப்படுத்தப்பட்ட கண்டிஷனர்கள், உங்கள் தலை முடியில் உள்ள எண்ணெய்ப் பசையை அகற்றாமல் மென்மையாக பட்டுப்போல் அழகாக வைக்கின்றன. மேலும், பொடுகிலிருந்து விடுதலையளிக்கிறது. **இவை எல்லாம் இரண்டே வாரங்களிலே...!**




**பொடுக்கு எமன்: தலை முடியின் நண்பன்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

Lintas CI CAC 29 2013 Tm